# சுதேசவாசகம்

நான்காம் புத்தகம்







# சுதேச வாசகம்

## நான்காம் புத்தகம்

600/3538

(திருத்திய பதிப்பு)

(ஆரம்பப் பாடசாலைப் புதிய பாட நிர்மாணத்
திட்டப்படி தயாரித்தது)

வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், பி. ஏ.,
அவர்கள் குமாரர்
**வி. சூ. சுவாமிநாதன்**
தொகுத்தது
சென்னை, எம். சிடி. முத்தையாச் செட்டியார்
உயர்நிலைப்பள்ளித் தலைமைத் தமிழாசிரியர்
**வித்துவான், பி. எஸ். சண்முகம் பிள்ளை**
திருத்தியது



**வி. சூ. சுவாமிநாதன்**
பிரசுரகர்த்தர்

மேலக்கோபுரத் தெரு,
மதுரை.

சுங்குராம செட்டி தெரு,
சென்னை.

 : : [விலை 50 ந. பை.

# முன்னுரை

---

ஆரம்பப் பாடசாலைகளின் புதிய பாடத் திட்டப்படி சுதேச வாசகம் நான்காம் புத்தகம் வெளியிடப் பெற்றுள்ளது. பாடங்கள் யாவும், நம் நாட்டுப் பழக்க வழக்கங்களுக்கும், தற்காலச் சூழ்நிலைக்கும், இவ்வகுப்பு மாணவரின் அறிவுத்திறத்திற்கும் ஏற்றவாறு அமைக்கப்பட்டுள்ளன. புதுச்சொற்களைச் சிரமமின்றிக் கற்பிக்கத் தக்க முறையிலேயே இந்நூல் எழுதப்பட்டுள்ளது.

பாடத்தில் கற்ற விஷயங்களை மனத்திற் கொள்ளுமாறு செய்வதற்குரிய வினாக்களுடன், மொழிப் பயிற்சிக்கும் இலக்கணப் பயிற்சிக்கும் தேவையான கேள்விகளும் ஒவ்வொரு பாடத்திலும் தரப்பட்டுள்ளன. சில எளிய பாட்டுக்களும், கதைப் பாடல்களும் சேர்க்கப்பட்டுள்ளன.

இப்புத்தகத்தில் ஸ்ரீ தேசிக விநாயகம் பிள்ளையவர்களது சில பாட்டுக்களைச் சேர்த்துக் கொள்ள இசைவு அளித்த பிள்ளையவர்களுக்கு எம் நன்றி உரித்தாகும்.

இந் நூலைத் திருத்தியமைப்பதில் எமக்கு உதவிய ஸ்ரீ வித்துவான், எஸ். முத்து ஐயங்கார் அவர்களுக்கு எமது நன்றி.

ஆசிரியர்கள்

## நாட்டு வணக்கம்

ஜன கண மன அதிநாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா,
பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
த்ராவிட உத்கல வங்கா,
விந்த்ய ஹிமாசல யமுனு கங்கா
உச்சல ஜலதி தரங்கா,
தவசுப நாமே ஜாகே,
தவசுப ஆசிஷ மாங்கே
காயே தவ ஜய காதா,
ஜன கண மங்கள தாயக ஜய ஹே
பாரத பாக்ய விதாதா,
ஜய ஹே! ஜய ஹே! ஜய ஹே!
ஜய ஜய ஜய, ஜய ஹே!

—ரவீந்திரநாத தாகூர்

---

## பொருள்

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற நீதான்
மக்கள் எல்லாருடைய மனத்திலும் ஆட்சி செலுத்துகிருய்.
நின் திருநாமம், பஞ்சாப்பையும் ஸிந்துவையும்
குஜராத்தையும் மஹாராஷ்டிரத்தையும்
திராவிடத்தையும் ஒரிஸாவையும் வங்காளத்தையும்
உள்ளக் கிளர்ச்சியடையச் செய்கிறது.
அது விந்திய, ஹிமாலய மலைகளில் எதிரொலிக்கிறது;
யமுனை, கங்கை நதிகளின் இன்ப நாதத்தில் கலக்கிறது;
இந்தியக் கடல் அலைகளால் ஜபிக்கப்படுகிறது.
அவை நின் ஆசியை வேண்டுகின்றன;
நின் புகழைப் பாடுகின்றன;
இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற உனக்கு
வெற்றி, வெற்றி, வெற்றி.

---

Correct Version used. Vide R. C. No. 33/TBC/56 dated 12-7-'56.

# பொருளடக்கம்

# 1. ஆடுவோமே

ஆடுவோமே—பள்ளுப்
பாடுவோமே;
ஆனந்த சுதந்திரம்
அடைந்து விட்டோமென்று (ஆடுவோமே)
உழவுக்கும் தொழிலுக்கும்
வந்தனை செய்வோம்—வீணில்
உண்டுகளித் திருப்போரை
நிந்தனை செய்வோம்.
விழலுக்கு நீர்பாய்ச்சி
மாயமாட்டோம்—வெறும்
வீணருக்கே உழைத்துடலம்
ஓய மாட்டோம். (ஆடுவோமே)
நாமிருக்கும் நாடு நமது
என்ப தறிந்தோம்—இது
நமக்கே உரிமையாம்
என்ப தறிந்தோம்—இந்தப்
பூமியில் எவர்க்கும் இனி
அடிமை செய்யோம்—பரி
பூரணனுக்கே யடிமை
செய்து வாழ்வோம். (ஆடுவோமே)

—பாரதியார்.

**அஞ்சொற்பொருள்**

வந்தனை - வணக்கம். நிந்தனை - வைதல். விழல் - புல். மாய - சாக. உடலம் - உடம்பு. பரிபூரணன் - கடவுள்.

**கேள்விகள்**

1. நாம் எதற்கு வந்தனை செய்வோம்?
2. நாம் என்ன செய்யமாட்டோம்?
3. நாம் அறிந்து கொண்டது என்ன?
4. இனி எவருக்கு அடிமை செய்யமாட்டோம்? எவருக்கு அடிமை செய்வோம்?

## 2. தமிழ் நாடு

நாம் பேசுவது தமிழ் மொழி. தமிழ் பேசுபவர்கள் வாழும் நாட்டுக்குத் தமிழ் நாடு எனப் பெயர். தமிழ் நாடு தென்னிந்தியாவின் தென்பாகத்திலுள்ளது. பண்டைக் காலத்தில் நம் தமிழ் நாடு கிழக்குக் கடற் கரைக்கும் மேற்குக் கடற்கரைக்கும் இடையே, தெற்கில் கன்னியா குமரி முதல், வடக்கே வேங்கடம் என்ற திருப்பதி வரை பரவியிருந்தது.

நம் தமிழ் நாட்டை முன் காலத்தில் சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் ஆண்டு வந்தனர். தமிழ் நாட்டு மூவேந்தர் நீதி செலுத்துவதில் இணையில்லாதவர் கள். அவர்கள் காலத்தில் தமிழ்க்கல்வி ஓங்கி வளர்ந் திருந்தது. விவசாயம் செழிப்புற்றிருந்தது. மக்கள் பெரிய தோணிகள் செய்து, அவைகளில் நம் நாட்டில் விளையும் சரக்குகளை ஏற்றிக்கொண்டு பல இடங் களுக்கும் சென்று வியாபாரம் செய்து வந்தனர். அந்நிய நாடுகளோடும் அவர்கள் வியாபாரம் செய்த னர். தமிழர் நெசவுத் தொழிலில் கைதேர்ந்தவர்களா யிருந்தனர். சிறந்த படை வீரர்களாய் விளங்கினர். அவர்களுக்கு இரும்பு முதலிய உலோகங்களால் பலவித ஆயுதங்கள் செய்யத் தெரிந்திருந்தது. சிற்பம், சங்கீதம், நாட்டியம், வைத்தியம், ஓவியம் முதலிய பல கலைகளிலும் அவர்கள் தேர்ச்சி பெற்றி ருந்தார்கள். அவர்களது அரசியல் முறை சிறந்தி ருந்தது. தமிழ்ப் புலவர் பலர், பல உயர்ந்த தமிழ்க் காவியங்களை இயற்றினர். அரசர்கள் பல கலைகளை யும் புலவர்களையும் ஆதரித்து வந்தனர்.

சேர ராஜ்யம்:—இது கேரளம் என்றும் சொல்லப் படும். இதில் கொச்சி, மலையாளம், திருவாங்கூரின்

வடபாகம், சேலம் ஜில்லாவின் பெரும் பகுதி முதலிய தற்காலப் பகுதிகள் அடங்கியிருந்தன. சேர நாட்டிற்குத் தலை நகரம் வஞ்சி. இதன் துறைமுகங்கள் முசிரி, மாந்தை, தொண்டி முதலியன. கோவலனது சரிதையாகிய சிலப்பதிகாரம் என்னும் தமிழ்க் காவியத்தைப் பாடிய இளங்கோவடிகள், சேரன்செங்குட்டுவன் என்னும் அரசனது தம்பியே. சேர அரசர்களின் கொடி, வில் கொடியாகும்.

சோழ ராஜ்யம்:—இதில் தற்காலத்திய திருச்சிராப்பள்ளி, தஞ்சாவூர், தென்னாற்காடு, கோயம்புத்தூர் முதலிய பகுதிகள் அடங்கியிருந்தன. சோழநாடு காவிரிப் பாய்ச்சலால் மிகவும் செழிப்பாய் இருந்தது. இந்நாட்டிற்கு தலைநகரம் திருச்சிராப்பள்ளிக்கு அருகிலுள்ள உறையூர். பிற்காலத்தில் தஞ்சையும் இதன் தலைநகராய் விளங்கிற்று. இந்நாட்டிற்குத் துறைமுகமாய் விளங்கியது காவிரிப்பூம் பட்டினம். அது காவிரி நதியின் முகத்துவாரத்தில் இருந்தது. அங்கு ஒரு தீபஸ்தம்பம் இருந்ததாகவும், பட்டினம் வெகு அழகாய் அமைந்திருந்ததாகவும், ஒரு காலத்தில் சோழ ராஜ்யத்தின் தலைநகராய் விளங்கியதாகவும் தமிழ் நூல்களிலிருந்து தெரிய வருகிறது. அக்காலத்தில் அது ஒரு பெரிய வியாபார ஸ்தலம். தமிழில் இராமாயணம் பாடிய கம்பர் சோழ நாட்டில் பிறந்தவரே. சோழர்களின் கொடி புலிக்கொடியாகும்.

பாண்டிய ராஜ்யம்:— இது சோழ நாட்டிற்குத் தெற்கே இருந்தது. இதில் தற்காலத்திய மதுரை, திருநெல்வேலி, இராமநாதபுரம் ஜில்லாக்களும் திருவாங்கூரின் சில பாகங்களும் சேர்ந்திருந்தன. முதலில் மணலூர் பாண்டிய நாட்டின் தலைநகரமாயிருந்தது. பின்னர் மதுரை தலைநகரமாகியது. மதுரையி

லுள்ள மீனுட்சி சுந்தரேசுவரர் கோவில் உலகப் புகழ் பெற்றது. பண்டைக் காலத்தில் மதுரையில் தமிழ்ச் சங்கம் இருந்தது. பல தமிழ்ப் புலவர்கள் அக்காலத் தில் கூடி, பல அரிய பெரிய தமிழ் நூல்களை இயற்றி னர். அரசர்களும் புலவர்களாகவே விளங்கினர். இந் நாட்டின் துறைமுகம் கொற்கை. அயல் நாட்டு வியா பாரிகள் கொற்கையில் இறங்கி, தங்கள் சரக்குகளை விற்பனை செய்து, இங்கிருந்து மீன், முத்து, பவளம், தந்தம், மயில் முதலியவைகளை வாங்கிச் செல்வார் கள். பாண்டிய மன்னர்களுக்கு மாறன் என்றும் வழுதி என்றும் பட்டப் பெயர்கள் உண்டு. அவர்களுடைய கொடியிலும் நாணயங்களிலும் மீன் உருவம் வரையப் பட்டிருந்தது.

அக்காலத்தில் நம் தமிழ் நாடு பல துறைகளில் சிறந்து விளங்கியது. நாமும் நம் தமிழ் மொழியும், தமிழ் நாட்டையும் எவ்வகையிலும் சிறந்தோங்கச் செய்வோமாக.

| | | | |
|---|---|---|---|
| பரவி | சங்கம் | தற்காலம் | முகத்துவாரம் |
| பகுதி | முத்து | பிற்காலம் | கைதேர்ந்தவர் |
| சரக்கு | பவளம் | அமைந்து | பண்டைக்காலம் |
| தோணி | காவியம் | மூவேந்தர் | |

### அருஞ்சொற்பொருள்

மூவேந்தர் - மூன்று அரசர்கள்; சேர, சோழ, பாண்டியர். சரக்கு - சாமான். தோணி - படகு. கைதேர்ந்தவர் - திறமை யுள்ளவர்.

### கேள்விகள்

1. பின் வரும் வார்த்தைகளை வாக்கியங்களிலமை :—
   பரவு, நூல், பண்டைக்காலம், சிற்பம், ஓவியம்.
2. பாண்டிய அரசர்களின் பட்டப் பெயர்களை எழுது.
3. சேர, சோழ நாட்டின் அக்காலத்திய எல்லைகளைக் குறிப்பிடு.

4. தமிழ் நாடு மிகவும் நாகரிகமடைந்திருந்தது என்பதற்கு உதாரணங்கள் கூறு.

பயிற்சி

(1) அ முதல் ஔ வரையிலுள்ள பன்னிரண்டும் உயிர் எழுத்துக்கள் எனப்படும். பிற எழுத்துக்களின் உதவியின்றியே இவற்றை ஒலிக்க முடியுமாகையால் இவை இப்பெயர் பெற்றன. இவற்றில் குறுகிய ஓசையுடையவை குறில் அல்லது குற்றெழுத்துக்கள் எனப்படும். நீண்ட ஓசையுடையவை நெடில் அல்லது நெட்டெழுத்துக்கள் எனப்படும்.

அ, இ, உ, எ, ஒ—குறில் ஐந்து
ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ. ஔ—நெடில் ஏழு.

(2) க் முதல் ன் வரையிலுள்ள பதினெட்டும் மெய்யெழுத்துக்கள் எனப்படும் இவற்றில்,

க், ச், ட், த், ப், ற்—வல்லினம்.
ங், ஞ், ண், ந், ம், ன்—மெல்லினம்.
ய், ர், ல், வ், ழ், ள்—இடையினம்.

(3) பின் வரும் சொற்களிலுள்ள ஒவ்வொரு எழுத்தும் எந்த வகையைச் சேர்ந்தது என்று எழுது.

அரம், ஈனம், எங்கு, ஓடம், கலம்.

## 3. படிப்பும் பகுத்தறிவும்

உதயபுரம் என்ற ஊரில் நான்கு சகோதரர்கள் இருந்தனர். அவர்கள் நால்வரும் கல்வி கற்பதற்கு ஜயபுரம் என்ற ஊருக்குச் சென்றார்கள். அங்கே அவர்கள் ஒரு நல்லாசிரியரை யடைந்து, பல கலைகளைப் பயின்று வந்தார்கள். அவர்களின் கடைசி சகோதரனான சுபுத்தி என்பவனுக்குப் படிப்பு சிறிதும் வரவில்லை. கலைகளைக் கற்றுக்கொள்ள ஆவல் சிறிதும் அவனுக்கு ஏற்படவில்லை. ஆனால் அவனுக்கு உலக அனுபவமும் நல்ல சாமர்த்தியமும் ஏற்பட்டது. மற்ற மூவரும் எப்பொழுதும் பல நூல்களைக் கற்பதிலேயே கண்ணுங் கருத்துமாக இருந்து வந்தனர். அவர்கள் சுபுத்தியை மூடன் என்று எண்ணி வெறுத்து வந்தார்கள்.

இவ்வாறு நான்கு வருடங்களில் அவர்களது படிப்பு முடிவடைந்தது. மூத்தவர்கள் மூவரும் எல்லா வித்தைகளிலும் வல்லவர்களானுர்கள். சுபுத்தியோ பகுத்தறிவுள்ளவனுகவும் ஆனுல் படிப்பில்லாதவனுக வும் இருந்தான். அவர்கள் நால்வரும் தங்கள் ஆசிரி யரிடம் விடைபெற்றுக்கொண்டு, தங்கள் ஊரை நோக்கிப் புறப்பட்டனர். வழியில் ராஜபுரி என்ற பட்டினம் இருந்தது. அப்பொழுது மூத்தவன் மற்ற வர்களை நோக்கி, "சகோதரர்களே! இன்னும் சிறிது தூரத்தில் ராஜபுரி என்ற நகரம் இருக்கிறது. அதை ஆளும் அரசன், கல்வியில் வல்லவர்களுக்குச் சிறந்த பரிசுகள் அளிக்கின்ருனும். நாமும் அங்கே சென்று பரிசு பெற்று வருவோம்; ஆனுல் நம்முள் சுபுத்தி மிகவும் மூடன். ஆகையால் அவனை இங்கேயே விட்டு விட்டுப் போவோம், என்ன சொல்லுகிறீர் கள் ?" என்ருன்.

அது கேட்ட மூன்ரும் சகோதரன், "அண்ணன் மார்களே ! படிக்காத முட்டாளாயிருந்த போதிலும், சுபுத்தி நம் கூடப்பிறந்தவன் அல்லவா? ஆகையால் அவனையும் கூட்டிக்கொண்டே சொல்வோம்," என்று கூறினுன். மற்றவர்களும் இதற்குச் சம்மதித்தனர். பிறகு நால்வரும் ராஜபுரியை நோக்கிப்புறப்பட்டனர். போகும்பொழுது அவர்கள் ஒரு காட்டின் வழியாய்ச் செல்ல நேர்ந்தது. அக்காட்டின் நடுவே ஓரிடத்தில் சில எலும்புகள் சிதறிக் கிடந்தன. அதைக் கண்ட தும் மூத்தவன், "தம்பிமார்களே! நாம் கற்ற வித் தையைப் பரிட்சை செய்ய ஒரு நல்ல தருணம் கிடைத் திருக்கிறது. இத் தருணத்தைக் கைவிடக் கூடாது. இதோ, இறந்த ஒரு புலியின் எலும்புகள் கிடக் கின்றன: நம்மவருள் ஒருவன் இந்த எலும்புகளை

ஒழுங்காக அடுக்கட்டும். மற்ருருவன் இதற்குத் தோலும் சதையும் உண்டாக்கட்டும். நான் இதற்கு உயிர் கொடுக்கிறேன்; என்ன சொல்கிறீர்கள்?" என்ருன்.

இதைக்கேட்ட சுபுத்தி மிகவும் பணிவுடன், "அண்ணன்மார்களே! தயவு செய்து நீங்கள் செய்யப் போகும் காரியத்தை யோசித்துச் செய்யுங்கள். இறந்த ஒரு புலியை நீங்கள் உயிர்கொடுத்து எழுப்



பினுல், அது நம்மையே முதலில் கொன்றுவிடும். ஆகையால் இந்தக் காரியத்தைச் செய்ய வேண்டாம். வேறு வழிகளில் உங்கள் வல்லமையைப் பரிட்சிக்கலாம்," என்று கூறி வேண்டினுன். அப்போது மற்ருரு சகோதரன் சுபுத்தியை நோக்கி, "அடே! அற்பப்பதரே! வித்தை கற்காத முழுமூடனுகிய நீயா எங்களுக்குப் புத்தி சொல்கிருய்? அண்ணன் கூறிய

படியே உன்னை அங்கேயே விட்டுவிட்டு வந்திருக்க வேண்டும்,'' என்று கோபத்துடன் கூறினான். மற்ற வர்களும் சுபுத்தியைக் கண்டிக்கலாயினர்.

ஆனால் சுபுத்தியோ அவர்களை வணங்கி, "அண்ணன்மார்களே! நீங்கள் எது வேண்டுமாயி னும் செய்யுங்கள். ஆனால் தயவு செய்து நான் ஒரு மரத்தின் மேல் ஏறிக்கொள்ளும்வரை பொறுங்கள். பிறகு உங்கள் வித்தைகளைப் பரிட்சித்து, அதன் பலனை அடையுங்கள்,'' என்று கூறி, ஒரு பெரிய மரத்தின் மேல் ஏறிக்கொண்டான்.

சுபுத்தி மரத்தின் மேல் ஏறிக்கொண்ட பின் சகோதரரில் ஒருவன் இறந்த புலியின் எலும்புகளை ஒழுங்காய் அடுக்கினான். இன்னொருவன் அதற்குத் தோலும் சதையும் உண்டாக்கினான். மூன்றாவது சகோதரன் அப்புலிக்கு உயிர் கொடுத்தான். உயிர் பெற்றெழுந்த புலியோ, அம்மூவர்மேலும் பாய்ந்து அவர்களைக் கொன்று தூக்கிக்கொண்டு காட்டுக்குள் ஓடி விட்டது! புலி ஓடி வெகுநேரம் ஆனபின், சுபுத்தி மனவருத்தத்துடன் மரத்திலிருந்து இறங்கி வீட்டுக் குச் சென்றான். ஆகையால் படிப்பு இருந்தால் மட்டும் பயன் இல்லை; சமயத்திற்குத் தகுந்த பகுத்தறிவும் வேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| சிதறி | வித்தை | வல்லவர் | பகுத்தறிவு |
| மூடன் | பயின்று | தருணம் | அற்பப்பதர் |
| ஆவல் | முட்டாள் | அனுபவம் | கண்டிக்க |

அருஞ்சொற்பொருள்

ஆவல் - மிகு விருப்பம். வித்தை - கலையறிவு. பயின்று - கற்று. பகுத்தறிவு - இது நல்லது இது தீது என்று வேறுபடுத்தி யறியும் அறிவு.

## கேள்விகள்

1. கல்வி கற்கச் சென்ற சகோதரர்களுள் இருந்த வேறுபாடு என்ன ?
2. இக்கதையைச் சுருக்கமாக எழுது.
3. பின் வரும் சொற்களை வாக்கியங்களில் அமைத்து எழுது :—சிதறு; தருணம்; பழகு; பயில்.

## பயிற்சி

(1) தமிழ் மொழியில் உள்ள எழுத்துக்கள் எத்தனை ?
(2) உயிர் மெய்யெழுத்து, ஆய்த எழுத்து இவை எவை ?
(3) பின் வரும் வாக்கியங்களைக் கவனி :—

1. நாய் குரைக்கிறது.
2. சுபுத்தி மரத்தின்மீது ஏறிக்கொண்டான்.

இவற்றில், நாய், மரம், சுபுத்தி என்ற சொற்கள் பெயர்ச் சொற்கள் என்பதும், குரைக்கிறது, ஏறிக்கொண்டான் என்ற சொற்கள் வினைச் சொற்கள் என்பதும் உங்களுக்குத் தெரியும்.

(4) பின் வரும் வாக்கியங்களில் உள்ள பெயர்ச் சொற்களையும் வினைச் சொற்களையும் எடுத்து எழுது :—

1. அவர்கள் ஆசிரியரிடம் கல்வி பயின்றனர்.
2. காட்டில் ஓரிடத்தில் சில எலும்புகள் சிதறிக் கிடந்தன.

(5) மாதிரியில் காட்டியிருப்பதுபோல் சொற்களைச் சேர்த்து எழுது :—

| | | | | |
|---|---|---|---|---|
| வேலையை | + | செய் | = | வேலையைச் செய் |
| மரத்தை | + | கண்டான் | = | |
| புலியை | + | கொன்ருன் | = | |
| வீட்டுக்கு | + | போனுன் | = | |
| மாணவனுக்கு | + | தம்பி | = | |
| இதை | + | பார் | = | |

# 4. உடற்பயிற்சி

இவ்வுலக வாழ்க்கையை நாம் திறமையுடன் நடத்துவதற்கு, நமது உடல், நோய்களால் துன்புறு மல், வலிமை பெற்றிருக்க வேண்டும். மாணவர்களாகிய உங்களுக்குக் கல்வி கற்பதே முதன்மையான வேலை. நீங்கள் காய்ச்சல் முதலிய நோய்களால் துன்புறும் பொழுது, உங்களுடைய வேலையைச் சரிவரச் செய்ய முடிவதில்லை. அதுபோலவே, எல்லோருக்கும் அவரவர் தொழிலைத் திறம்படச் செய்வதற்கு உடல் நலம் இன்றியமையாதது.

நமது உடல் வலிமை பெறுவதற்கு, நாம் செய்ய வேண்டுவது யாது? இந்த வினவிற்குச் சுருக்கமாக, 'உடற்பயிற்சி செய்தல்' என்று விடையளிக்கலாம். சிறுவர்கள் அதிகமாக வேலை செய்தால், அவர்களுடைய உடல் நலம் கெட்டு விடுமென்று அஞ்சும் பெற்ருேர் சிலர் இருக்கிருர்கள். இவர்கள் நமது உடம்பின் இயல்பை அறியாதவர்கள் என்று சொல்லலாம். உழைப்பினுல்தான் நமது உடல் உரம் பெறுகிறது. உடலுழைப்பு ஏதும் இல்லாதிருப்பவர்கள் வலிமை குறைந்து எளிதில் நோயுறுவார்கள்.

வயதானவர்கள் பலர் தத்தம் பிழைப்புக்கு வேண்டிய தொழில்களைச் செய்யும்போதே உடலுக்குத் தேவையான உழைப்பும் பயிற்சியும் அவர்களுக்குக் கிடைத்து விடும். தனிப்பட்ட உடற்பயிற்சி அவர்களுக்குத் தேவையில்லை. ஆனுல் கல்வி பயிலும் பருவத்திலுள்ள மாணவர்களுக்குத் தனிப்பட்ட உடற் பயிற்சிகள் இன்றியமையாதவை. நீங்கள் முக்கியமான சில உடற்பயிற்சிகளை நாள்தோறும்செய்துவர வேண்டும். உங்களுக்கு உடற்பயிற்சி முக்கியமானது

என்பதை வற்புறுத்தவே பள்ளி நேரத்தில், வாரத்திற்கு இரண்டு மூன்று நாட்களில் உடற்பயிற்சி விளையாட்டுகளுக்காக நேரம் ஒதுக்கப்பட்டிருக்கிறது.

காலை, மாலை வேளைகளில் திறந்த வெளிகளில் உடற்பயிற்சி செய்யவேண்டும். ஓடுதல், குதித்தல், பலவகையான பந்தாட்டங்கள் போன்ற விளையாட்டுக்களில் நீங்கள் ஈடுபடலாம். தண்டால் எடுத்தல்.



பஸ்கி போடுதல் போன்ற பயிற்சிகளையும் செய்யலாம். நீந்துவதும் ஒரு நல்ல பயிற்சியாகும். சடுகுடு, கிளித்தட்டு போன்ற விளையாட்டுக்களும் உடலுக்கு நல்ல பயிற்சியளிக்கும்.

உடற்பயிற்சி செய்யும்பொழுது உடலில் வேர்வை உண்டாகும். இதனால் உடலிலுள்ள கழிவுப் பொருள்கள் நீக்கப்படுகின்றன. திறந்தவெளிக் காற்றை சுவாசிப்பதால், இரத்தம் சுத்தமடையும். நமது தசைகளுக்கு இரத்த ஓட்டம் அதிகமாகப்

பாய்வதால் அவை வளர்ச்சி யடையும். நல்ல பசி எடுக்கும். உடற்பயிற்சி செய்பவர்கள் சத்துள்ள உணவுகளைப் புசிக்கவேண்டும்.

உடற்பயிற்சி செய்யும்போது அளவுமீறிச் செய்துகொண்டே இருக்கக்கூடாது. களைப்பு ஏற்பட்டு விட்டால், உடற்பயிற்சியை நிறுத்திவிட்டு, ஓய்வெடுத்துக் கொள்ளவேண்டும். நாளடைவில் பயிற்சிக் காலத்தையும், பயிற்சியின் அளவையும் சிறிது சிறிதாக அதிகப்படுத்தலாம்.

குறித்த வேளைகளில், ஒழுங்காக உடற்பயிற்சி செய்து வந்தால், உடல் வலிமையும் சுறுசுறுப்பும் ஏற்படுவதுமல்லாமல், மூளையும் அறிவும் வளர்ச்சி யடையும். உடல் வலிமையற்றவர்கள் பெரிய அறிவாளிகள் ஆவது அரிது.

| | | | |
|---|---|---|---|
| அறிவு | அரிது | களைப்பு | திறம்பட |
| பயில் | இயல்பு | புசிக்க | அறிவாளி |

### அருஞ்சொற்பொருள்

துன்புறுமல் - கஷ்டப்படாமல். திறம்பட - சிறந்த முறையில், நன்ருக. இயல்பு - தன்மை. உரம் - வலிமை. பயிலும் - கற்கும். வற்புறுத்த-உறுதியாகச் சொல்ல. ஈடுபடலாம்-சேர்ந்து உழைக்கலாம். நாளடைவில் - நாளாக ஆக. அரிது - பெரும்பாலும் இல்லை.

### கேள்விகள்

1. உடல் நலம் எதற்கு இன்றியமையாதது ?
2. தனிப்பட்ட உடற்பயிற்சி யாருக்குத் தேவையில்லை ? யாருக்குத் தேவை ?
3. மாணவர்கள் செய்யத் தகுந்த சில உடற்பயிற்சிகளை எழுது.
4. உடற்பயிற்சி செய்வதால் நம் உடம்பு எவ்வாறு வலிமை பெறுகிறது ?

## பயிற்சி

(1) எதிரான பொருளுடைய சொற்களை எழுது :—

துன்புறு; அரிது; அதிகப்படுத்து; இல்லை; செய்யலாம்.

(2) பின் வரும் சொற்களின் பொருள் வேறுபாடு விளங்கும்படி வாக்கியங்களில் உபயோகி :—

1. வழி, வலி. 2. கலை, கழை, களை. 3. பறவை, பரவை. 4. இறங்கு, இரங்கு.

(3) பின் வரும் வாக்கியங்களிலுள்ள வினைச்சொற்களைக் கவனி:—

1. என் நண்பன் உண்ண வந்தான்.
2. படித்த பையன் புகழ் பெறுவான்.

இவற்றிலுள்ள வினைச் சொற்களில் வந்தான், பெறுவான் என்ற இரண்டும் பொருள் முடிவு பெற்றுள்ளன. உண்ண, படித்த என்ற இரண்டும் வினைச் சொற்களே; ஆனால் பொருள் முடிவு பெறவில்லை. பொருள் முடிவு பெற்ற வினைச் சொற்களுக்கு முற்று வினைகள் என்றும் முடிவு பெறாத வினைச் சொற்களுக்கு எச்ச வினைகள் என்றும் பெயர்.

(4) பின் வரும் வாக்கியங்களிலுள்ள முற்று வினைகளையும் எச்ச வினைகளையும் எடுத்து எழுது :—

1. கல்வி பயிலும் மாணவருக்கு உடற்பயிற்சி வேண்டும்.
2. ஆசிரியர் காலையில் எழுந்து படிக்கிறார்.
3. உடற்பயிற்சி செய்யத் தகுந்த நேரம் காலையும் மாலையுமே.
4. பாடகன் தெருவில் பாடிக்கொண்டே சென்றான்.

# 5. தமிழ் இலக்கியம்

வள்ளுவர் தந்த திருமறையைத்—தமிழ்
மாதின் இனிய உயிர் நிலையை
உள்ளம் தெளிவுறப் போற்றுவோமே—என்றும்
உத்தம ராகி ஒழுகுவோமே. 1

பாவின் சுவைக்கட லுண்டெழுந்து—கம்பன்
பாரிற் பொழிந்ததீம் பாற்கடலை
நாவின் இனிக்கப் பருகுவோமே—நூலின்
நன்னய முற்றுந் தெளிகுவோமே. 2

தேனிலே ஊறிய செந்தமிழின்—சுவை
தேரும் சிலப்பதி காரமதை
ஊனிலே எம்முயிர் உள்ளளவும்—நிதம்
ஓதி யுணர்ந்தின் புறுவோமே. 3

கற்றவர் மெச்சும் கலித் தொகை—யாமின்பக்
கற்பனை சேருங் களஞ்சியத்தை
முற்ற அளந்து தெரிவோமே—கால்
மூழ்கும் துறைகண்டு வாழ்வோமே. 4

பண்டை இயற்கை வளங்களெல்லாம்—பத்துப்
பாட்டின் வளத்தினிற் கண்டறிந்து
மண்டல மெங்கும் கமழும்—அருந்தமிழ்
வாசம் நுகர்ந்து மகிழ்வோமே. 5

—தேசிக விநாயகம் பிள்ளை

அருஞ்சொற்பொருள்

மறை - வேதம். வள்ளுவர் தந்த மறை - திருக்குறள். உள்ளம் - மனம். ஊன் - சதை, உடம்பு. நிதம் - தினந்தோறும். மண்டலம் - பூமி. வாசம் - வாசனை.

கேள்விகள்

1. திருக்குறள் தமிழ் மாதினுடைய எதைப் போன்றது ?
2. கம்பன் பூமியில் பொழிந்த இனிய பாற்கடல் எது ?
3. இச் செய்யுளில் கவி சிறப்பித்துப் பேசும் நூல்கள் யாவை ?

# 6. பட்டு

பருத்திப் பஞ்சிலிருந்து நெய்யப்பட்ட ஆடைகளை எல்லோரும் உடுத்துகின்றனர். ஆனால் பணம் உள்ளவர்களே பட்டினாலான ஆடைகளை அணிகிறார்கள். பட்டாடைகள் பளபளப்பாகவும் மிருதுவாகவும் இருக்கும். பட்டுநூல் ஒரு வகைப் பூச்சியால் அமைக்கப்படும் கூட்டிலிருந்து கிடைக்கிறது. இப் பூச்சிக்குப் பட்டுப்பூச்சி என்று பெயர். பட்டு எப்படி உண்டாகிறது என்பதைப்பற்றி கவனிப்போம்.




1. பட்டுப்பூச்சி முட்டையிடுதல். 2. பட்டுப்புழு முசுக்கட்டை இலையைத் தின்கிறது. 3. பட்டுப்புழுவின் கூடு (பிளந்து காட்டப்பட்டுள்ளது). 4. கூட்டுப்புழு.

தாய்ப்பூச்சி முசுக்கட்டை இலையின்மேல், கடுகு போல் சிறுத்த முட்டைகளை இடும். அம்முட்டைகள் சுமார் இருநூறு முதல் நானூறுவரை இருக்கும். அம்முட்டைகளெல்லாம் சூரிய உஷ்ணத்தினால் பொரிந்து புழுக்கள் வெளிப்படும். முட்டையிலிருந்து வெளிப்

பட்ட புழு சுமார் அரைக்கால் அங்குல நீளமுள்ள தாகவும், சாம்பல் நிறமாயுமிருக்கும். இப்புழு முசுக் கட்டை இலையைத் தின்று வளர்ந்து, ஒரு வாரத்தில் நன்ருய்ப் பருத்துவிடும். பிறகு் தன் தோலை உரித் துக்கொண்டு வெண்மை நிறமாகும். இதன்படியே அப்புழு ஐந்தாறு நாட்களுக்கு ஒரு முறையாக நாலைந்து தடவை தன் தோலை உரித்துக்கொள்ளும். வெண்மையாய் இருந்த புழு, தோல் உரியவும் மஞ்சள் நிறமாக மாறிக் கடைசியில் பசுமை நிறமாய்விடும். உடனே முசுக்கட்டை இலையைத் தின்பதை நிறுத்தி விடும்.

இச்சமயம் பட்டுப் புழு, ஒன்றரை அல்லது இரண்டு அங்குல நீளமுள்ளதாக இருக்கும். அப்புழு முசுக்கட்டைச் செடியின் கிளையில் தன் கூட்டைக் கட்டத் தொடங்கும். அத்ற்காக அது, தன் வாயின் கீழுள்ள துவாரங்கள் வழியாக ஒரு வகைப் பிசினை வெளிப்படுத்தும். இந்தப் பிசின், மஞ்சள் நிறமாக வும் பளபளப்பாகவும் இருக்கும். இப் பிசினிலிருந்து நூல் நூற்றுத் தானும் உள்ளே இருந்துகொண்டு தன் உடலை மறைக்கும்படியான ஒரு கூட்டை அமைத்துக் கொள்ளும். இதற்கு மூன்று நான்கு நாட்களாகும். இப்படிக் கட்டிய கூடு முட்டை வடிவ மாயிருக்கும். கூட்டில் அடைபட்ட புழு மறுபடியும் ஒரு தரம் தோலுரித்துப் பொன்னிறம் அடைகிறது.

பிறகு அப்புழு தன் கூட்டுக்குள்ளேயே பதினைந்து இருபது நாட்கள் உறங்கிக் கிடக்கும். இந்த உறக்கமே அதன் வளர்ச்சிக்கு மிகவும் உதவி யாய் இருக்கின்றது. கூட்டுக்குள் இருக்கும்போது, நாளாக ஆக, உருவம் மாறிக்கொண்டே வந்து,

கடைசியில் இறகு முளைத்த பட்டுப் பூச்சியாகிக் கூட்டைத் துளைத்துக்கொண்டு வெளியேறுகிறது. இதுவே பட்டுப் பூச்சியின் இயற்கை வளர்ச்சி.

இவ்வாறு பூச்சியை வெளியேறவிட்டால், கூட்டிலுள்ள பட்டு நூல் சின்ன பின்னமாய் அறுந்து போகும். ஆகையால் பூச்சி உள்ளிருக்கும்பொழுதே கூட்டை வெந்நீரில் போட்டுப் பூச்சியைக் கொன்று, பட்டு நூலை எடுத்துக் கொள்வார்கள். இவ்வாறு எடுத்த பட்டு, சவுக்காரம் கலந்த தண்ணீரில் கழுவிச் சுத்தம் செய்யப்படுகிறது. பிறகு அதன் நுனியைக் கண்டுபிடித்துக் கழிகளில் சுற்றுவார்கள். சுமார் இரண்டாயிரம் கூடுகளிலிருந்து ஒரு ராத்தல் பட்டு நூல் கிடைக்கும். இந்தப் பட்டிலிருந்துதான் புடவைகளும் பிற பட்டுத் துணிகளும் நெய்யப்படுகின்றன.

பட்டுப் பூச்சி முதலில் நம் நாட்டில் இருக்கவில்லை. சீன தேசத்தில் மட்டும் இப் பூச்சிகளை வளர்த்துப் பட்டாடைகள் நெய்து, நல்ல லாபம் அடைந்து வந்தனர். பின்னர் ஐரோப்பியப் பாதிரிகள் மூலம் இது பல தேசங்களுக்கும் பரவலாயிற்று. இப்பொழுது உலகத்தில் பல நாட்டினர் பட்டுப் பூச்சிகளை வளர்க்கிறார்கள். நமது தேசத்தில் வங்காளம், மைசூர், காஷ்மீரம் முதலிய இடங்களில் பட்டு அதிகம். நமது ராஜ்யத்தில் காஞ்சீபுரம், கொள்ளேகாலம், பெங்களூர், பெத்தாபுரம் முதலிய இடங்களில் பட்டாடைகள் நெய்யப்படுகின்றன.

| | | |
|---|---|---|
| பிசின் | ராத்தல் | சவுக்காரம் |
| அறுந்து | துவாரங்கள் | மிருதுவாக |
| உறங்கி | பொரிந்து | துளைத்துக்கொண்டு |
| உதவியாய் | முசுக்கட்டை | பளபளப்பாய் |
| கழிகள் | பாதிரிகள் | வடிவம் |

### அருஞ்சொற்பொருள்

பிசின் - பசை. உறங்கி - தூங்கி. உதவாது - பயன்படாது. பாதிரி - கிறிஸ்துவ மதத் துறவி. பொரிந்து - வெடித்து.

### கேள்விகள்

1. பட்டுப் பூச்சியின் வளர்ச்சியைப் பற்றி ஒரு பக்கத்திற்கு மேற்படாமல் எழுது.
2. பட்டு எப்படி எடுக்கப்படுகிறது ?
3. பட்டாடைக்கும் பருத்தி ஆடைக்கும் உள்ள வித்தியாசம் என்ன ?

### பயிற்சி

(1) கோடிட்ட இடங்களில் தகுந்த சொற்களைச் சேர்த்துப்படி:—

1. —— ஆடைகள் மிருதுவாக இருக்கும்.

2. பட்டு நூலின் நுனியைக் —— பிடித்துக் —— சுற்றுவார்கள்.

(2) எதிர்மொழி கூறு :— ஏழை, மிருது, உஷ்ணம், உறக்கம், இயற்கை, வெந்நீர், சுத்தம்.

(3) அ, இ, உ என்ற மூன்று எழுத்துக்களும் பொருள்களைச் சுட்டுவதில் பயன்படுகின்றன. அவ்வாறு சுட்டுப்பொருளில் வரும்பொழுது இவை சுட்டெழுத்துக்கள் எனப்படும்.

(உ-ம்) அந்த, இந்த, உந்த.

அம்மனிதன், இப்புத்தகம், உவ்வீடு.

எ, யா, ஆ, ஓ, ஏ, ஆகிய எழுத்துக்கள் சில சொற்களில் வினப் பொருளைத் தரும். அப்பொழுது அவை வினவெழுத்துக்கள் எனப்படும்.

(உ-ம்) எப்பொருள் ? யாவன் ? அவனா ? கேசவனோ ? ஏது ?

(4) பின் வரும் சொற்களில் சுட்டெழுத்துக்களையும் வினவெழுத்துக்களையும் குறிப்பிடு :—

அவன், அம்மா, இம்மனிதன், இறகு, உம்மனிதன், உரிமை, எங்கு, ஏணி, யானை, யார்.

(5) மாதிரியில் காட்டியது போல் பிரித்தெழுது :—

| | |
|---|---|
| பசும்பொன் | = பசுமை + பொன் |
| செம்மரம் | = |
| வெண்சாமரை | = |
| கருங்குரங்கு | = |

## 7. வீரத்தாதி

நம் இந்தியா தேசத்தில் ராஜபுத்திரர் என்ற ஒரு இனத்தார் இருக்கின்றனர். அவர்கள் மிகவும் சிறந்த வீரர்கள். பிறருக்கு உதவிசெய்யத் தமது உயிரையும் கொடுக்க முன்வருவார்கள். அவர்கள் ராஜபக்தி மிகுந்தவர்கள். ராஜபுத்திர மாதர்களோ கற்பையே தமது அணியாகக் கருதுபவர்கள்; கத்தி எடுத்துப் போர் புரியவும் அஞ்சார்கள். ராஜபுத்திரர்களுடைய ராஜ்யம் ராஜபுதனம் என்பது. ராஜபுதனத்தில் பல பிரிவுகள் இருந்தன. ஒவ்வொரு பிரிவுக்கும் தலைவன் ஒருவன் உண்டு. அவனை ராணா என்று சொல்லுவார்கள். இந்தப் பிரிவுகளுள் மீவார் ராஜ்யம் மிகவும் பெயர் பெற்றது. ஒரு காலத்தில் அதை விக்கிரமஜித் என்னும் ராணா ஆண்டுவந்தான்.

மீவாரில் வனவீரன் என்பவன் சேனாதிபதியாய் இருந்தான். அவன் மிகவும் கொடியவன். மீவார் ராஜ்யத்தை அபகரிக்க எண்ணங்கொண்டான். தன் கீழுள்ள சேனையின் உதவியால், திடீரென விக்ரமஜித்தைக் கொன்றுவிட்டான். பிறகு தானே அரசனாக நிலைத்திருக்கவேண்டி, ராணாவைச் சேர்ந்தவர்கள் யாவரையும் கொல்ல வழிதேடினான். அப்பொழுது விக்ரமஜித்தின் தம்பியான உதயசிங் சிறு குழந்தையா யிருந்தான். அவன் பன்னா என்னும் தாதியால் வளர்க்கப்பட்டு வந்தான். பன்னா விக்கிரமஜித்தினிடம் வேலை பார்த்தவள்.

வனவீரன், ராணாவைக் கொன்றதையும், உதயசிங்கைக் கொல்ல இருப்பதையும் அவள் அறிந்தாள். எப்படியும் ராஜகுமாரனான உதயசிங்கைக் காப்பாற்ற நினைத்தாள். விக்கிரமஜித்தினிடம் வேலை பார்த்த

நம்பிக்கையுள்ள வேலைக்காரன் ஒருவனை இவ்விஷயத்தில் உதவி செய்ய வேண்டினாள். அவனும் அவளுக்கு உதவி செய்ய வாக்களித்தான். ஆனால் வனவீரன், உதயசிங்கை யாரும் வெளியே கொண்டு போக முடியாதபடி காவல் வைத்திருந்தான். ஆகையால் அவர்களால் ஒன்றும் செய்ய முடியவில்லை.

இவ்வாறு சில நாட்கள் சென்றன. வனவீரனது செய்கைகள் அந்நாட்டிலுள்ள சில பிரபுக்களுக்குப் பிடிக்கவில்லை. சிலர் கலகம் செய்ய ஆரம்பித்தனர். 'உதயசிங் உயிருடன் இருப்பதாலேயே இவ்வாறு நடைபெறுகிறது' என்றெண்ணிய வனவீரன், உதயசிங்கைக் கொல்ல நினைத்தான். ஒருநாள் நடு இரவில் அந்த நம்பிக்கையுள்ள வேலைக்காரன் பன்னாவிடம் ஓடிவந்து, "அம்மா! பெரிய ஆபத்து வந்துவிட்டதே! இனி என்ன செய்வோம்? எவ்வாறு இளவரசனைக் காப்பாற்றுவோம்? வனவீரன் உருவிய கத்தியுடன் நம் இளவரசனை வெட்ட வருகிறான். தப்ப வழியில்லையே," என்று பரபரப்புடனும் துயரத்துடனும் கூறினான். பன்னா சமயத்திற்குத் தகுந்த அறிவு படைத்தவளாதலால், உடனே ஒரு கூடையில் உதயசிங்கை வைத்து, அவன்மீது பழங்களையும் இலைகளையும் போட்டு நன்கு மூடி, அவ் வேலைக்காரன் கையில் ஒப்புவித்தாள். மீவார் நாட்டைத் தாண்டி, அடுத்த நாட்டு அரசனிடம் இளவரசனை ஒப்புவிக்க வேண்டினாள். அவ்வேலைக்காரனும் ஒத்துக்கொண்டு, அக்கூடையைத் தலைமீது சுமந்து கொண்டு வெளியே சென்றான். காவலரும் அது பழக்கூடையென்றெண்ணிப் பேசாமல் இருந்து விட்டனர்.

வனவீரன் உள்ளே நுழைவதற்குள் பன்னு, உதயசிங்கின் வயதும் உயரமும் உள்ள தனது குழந்தைக்கு ராஜகுமாரனது உடைகளை அணிவித்தாள். இளவரசனது தொட்டிலில் தன் குழந்தையைப் படுக்கவைத்தாள். உருவிய கத்தியுடன் உள்ளே நுழைந்த வனவீரன் பன்னுவை நோக்கி, "எங்கே ராஜகுமாரன்? ராஜகுமாரன் எங்கே? உடனே




காண்பி," என்று கோபத்துடன் கூறினான். ஆனால் பன்னுவோ வாய் திறக்கவில்லை. தொட்டிலையே பார்த்த வண்ணமிருந்தாள். வனவீரனும் தொட்டிலிலிருந்த குழந்தையே உதயசிங் என்றெண்ணி, கத்தியால் அதை வெட்டிவிட்டு வெளியே சென்றான். ராஜகுமாரனைக் காப்பாற்றத் தன் குழந்தை இறந்ததற்காகப் பன்னு சிறிதும் வருந்தவில்லை. ஆனால் அரண்மனையை விட்டு உடனே வெளியே சென்றுவிட்டாள். என்னே பன்னுவின் ராஜபக்தியும் தியாகமும்!

உதயசிங்கைக் கொண்டு சென்ற வேலைக்காரன் அடுத்த நாட்டு அரசனிடம் அடைக்கலம் புகுந்தான். அவனும் உதயசிங்கை ஒருவருக்கும் தெரியாமல் வளர்த்து வந்தான். நாளடைவில் உதயசிங் அரசனுக்குரிய எல்லாக் கலைகளையும் கற்றுப் பெரு வீரனானான். தன் பிறப்பு வளர்ப்பை யறிந்தான். வேண்டிய படைகளைத் திரட்டிக்கொண்டு மீவார் மீது படையெடுத்து வனவீரனைக் கொன்று, தான் ராணாவானான். வனவீரனது கொடுமையிற் சிக்கி வருந்திய குடிகளும் உதயசிங் ராணாவை எதிர்கொண்டழைத்தனர்; உதயசிங்கும் குடிகள் மகிழ அரசாட்சி புரிந்தான்.

உதயசிங் ராணாவானதும், பெற்ற பிள்ளையைக் கொடுத்துத் தன்னைக் காத்த பன்னாவைத் தேடிக் கண்டுபிடித்தான். அவளை அரண்மனையிலேயே தன் சொந்தத் தாயைப்போல் பாராட்டிக் காப்பாற்றி வந்தான். பன்னாவும் தன் சொந்தப்பிள்ளை உயிர்பெற்று வந்தாற்போல் சந்தோஷத்துடன் வாழ்ந்துவந்தாள்.

ஆனால் உதயசிங் என்ன செய்தாலும் பன்னா செய்த உதவிக்கும் தியாகத்திற்கும் இணையாகுமா? அவளுடைய உதவியே உதவி! அவள் செய்த தியாகமே தியாகம்! அவளே வீரத்தாதி!

| | | | |
|---|---|---|---|
| வாக்களித்தான் | தாதி | நிலைத்து | அபகரி |
| முன்வருவார்கள் | சிக்கி | பரபரப்பு | ராணா |
| நடைபெறுகிறது | உருவிய | நம்பிக்கை | அஞ்சார் |
| மிகுந்தவர்கள் | திரட்டி | கலகம் | ராஜபக்தி |

அருஞ்சொற்பொருள்

தாதி - தோழி, வேலைக்காரி. ராணா - அரசன். அபகரி - கைப்பற்று. அஞ்சார் - பயப்படமாட்டார். வாக்களித்தான் - உறுதியாகக் கூறினான்.

## கேள்விகள்

1. மீவாரை யாரிடமிருந்து வனவீரன் கைப்பற்றினான்?
2. உதயசிங்கை பன்னா எப்படிக் காப்பாற்றினாள்?
3. உதயசிங் எப்படித் தனது உரிமையைத் திரும்பவும் பெற்றான்?

## பயிற்சி

(1) பின்வரும் சொற்களை அமைத்து வாக்கியங்கள் எழுதுக:—
பாராட்டு; பரபரப்பு; அபகரி; திரட்டு.

(2) பின்வரும் சொற்களின் பொருள் வேறுபாடு என்ன? வாக்கியங்களில் உபயோகித்துக் காட்டு:—

1. கறந்தான், கரந்தான். 2. அறம், அரம்.
3. பாலம், பாளம். 4. வேலை, வேளை.

(3) முற்றுவினைகள் மூன்று காலங்களில் வரும். அவை இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம்.

செய்தான், சுட்டான்—இறந்தகாலம்.
செய்கிறான், சுடுகின்றான்—நிகழ்காலம்.
செய்வான், சுடுவான்—எதிர்காலம்.

பின்வரும் வாக்கியங்களிலுள்ள வினை முற்றுக்கள் எந்தக் காலத்தைச் சேர்ந்தவை என்று கூறு:—

1. வேடுவன் காட்டில் வேட்டையாடினான்.
2. ஆசிரியர் மாணவருடன் போகிறார்.
3. கெடுவான் கேடு நினைப்பான்.

(4) பின்வரும் வாக்கியங்களிலுள்ள தவறுகளைத் திருத்திஎழுது:-

1. பரவைகள் மரத்தின்மீது அமர்ந்துள்ளன.
2. தக்க வேலையில் வந்து சேர்ந்தான்.
3. நன்றி மரவேல்.
4. அவனுடைய தோட்டத்தில் ஆயிரக்கணக்கான மறங்கள் வளர்கிரது.

(5) பின்வரும் வாக்கியங்களிலுள்ள எச்ச வினைகளைக் கூறு: அவை எந்தச் சொற்களைக்கொண்டு முடிகின்றன என்பதையும் கண்டுபிடி:—

1. சேர்ந்து வாழ்தலே சிறந்த வலிமை.
2. அஞ்சா நெஞ்சம் படைத்தவர்களே வாழ்க்கையில் வெற்றி பெறுவர்.

# 8. பாய் பின்னுதல்

(உரையாடல்)

**கமலா :** அம்மா ! இந்தப் பாய் எவ்வளவு அழகாயிருக்கிறது ! இதை எதனுல் செய்கிருர்கள் ?

**தாயார் :** இது பனேயோலேப் பாய். இதைப் பனே யோலேகளால் பின்னுகிருர்கள். கோரம்பாய் கோரைப் புல்லினுலும், தாழம்பாய் தாழை யோலேகளாலும் பின்னப்படும்.

**கமலா :** இதைப்போல் ஒரு பாயை நாம் பின்ன முடியுமா, அம்மா ?

**தாயார் :** நன்ருகப் பின்னலாம். எனக்குப் பாய் பின்னத் தெரியும். நான் உனக்குக் கற்றுக் கொடுக்கிறேன்.

**கமலா :** இப்பொழுது கற்றுக்கொடு. எங்கள் பள்ளிக்கூடத்தில் கூட, பாய் பின்னக் கற்றுக் கொடுக்கப் போகிருர்களாம். நான் இப்பொழுதே கற்றுக் கொண்டுவிட்டால், பள்ளிக்கூடத்தில் நன்ருகப் பின்னுவேன்.

**தாயார் :** அப்படியே செய்யலாம். அந்த மூலேயில் உள்ள பனேயோலேகளேயும் கத்தியையும் எடுத்துக் கொண்டுவா.

**கமலா :** இதோ கொண்டு வந்தேன்.

**தாயார் :** இதோ பார் ! பனேயோலேகளின் ஈர்க்கை எடுத்துவிட்டு, ஒவ்வொரு ஓலேயையும் நீளப் போக்கில் இரண்டாக்க வேண்டும். ஓரங்களேக் கத்தியில் வாரி, ஒடுக்கமான நுனியை அறுத்து விடவேண்டும். நாம் தயாரித்த ஓலே சுமாராக




பனையோலைகளைப் பாயாகப் பின்னும் முறையை
விளக்கும் படங்கள்

எங்கும் ஒரே அகலமுள்ளதாக இருக்கிறது பார்த்தாயா ?

கமலா : ஆம், அம்மா ?

தாயார் : இவை எல்லாம் முறிந்து போகாதபடி தண்ணீர் தெளித்துப் பதப்படுத்த வேண்டும்.

கமலா : அதற்காகத் தான் தண்ணீர் தெளிக்கிருயா ?

தாயார் : ஆம். இப்பொழுது ஈர்க்கு ஒன்றை எடுத்து, 'ட' வைப் போல் வளைக்க வேண்டும். ஒரு ஓலையை எடுத்து, அதைத் தக்கபடி மடித்து, 'ட' வின் மூலையைப் பொதிந்து மூடவேண்டும். நன்ருகக் கவனித்துக்கொள்.

கமலா : ஆகட்டும் அம்மா!

தாயார் : பிறகு அந்த ஓலையின் இரு மடிப்புக்களும் 'ட' வின் இரு கோடுகளுக்குச் சரியான மையத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். இந்த மடிப்புக் களை ஆதாரமாக வைத்துக் கொண்டு, வேறு ஓலைகளால் பாய் பின்ன வேண்டும். பின்னும் பொழுது ஓலைகள் எப்படி மாறி மாறி மேலும் கீழும் வருகின்றன என்று பார்த்துக்கொள்.

கமலா : எனக்கு ஓலைகளைக் கிழித்துச் சரிப்படுத்திக் கொடு. நானும் ஒரு பாய் பின்னுகிறேன்.

| | | | |
|---|---|---|---|
| மையத்தில் | மடிப்பு | ஆதாரம் | ஒடுக்கமான |
| தாழை | கோரை | ஈர்க்கு | பொதிந்து |
| தாழம்பாய் | கோரம்பாய் | பதப்படுத்து | வாரி |

அருஞ்சொற்பொருள்

வாரி - சீவி. பதப்படுத்து - பக்குவம் செய். பொதிந்து - உள்ளே வைத்து. ஒடுக்கமான - குறுகிய.

கேள்விகள்

1. பாய் பின்னுதலைப்பற்றி ஐந்து வாக்கியங்கள் எழுது.
2. உனக்குத் தெரிந்த பாய் வகைகளைக் கூறு.

## பயிற்சி

(1) பின்வரும் சொற்களின் பொருள் விளங்குமாறு, சொந்த வாக்கியங்களில் உபயோகி:—

1. அழி, அளி. 2. தனி, தணி. 3. எரி, எறி. 4. மரி, மறி. 5. பரி, பறி. 6. வழி, வலி.

(2) பின்வரும் வாக்கியங்களில் வரும் எழுவாய், பயனிலே, செயப்படுபொருள்களை எடுத்தெழுது:—

1. நான் செல்வேன்.
2. அந்தப் பனேயோலேயை எடுத்து வா.
3. நானும் ஒரு பாய் பின்னுகிறேன்.

(3) மேலே காட்டிய வாக்கியங்களில், செல்வேன் என்ற பயனிலேக்குச் செயப்படுபொருள் இல்லே. ஆகையால் செல்வேன் என்பதற்குச் செயப்படுபொருள் குன்றியவினே என்று பெயர். எடுத்து வா என்ற வினேக்குப் பனேயோலேயை என்பது செயப்படுபொருள். பின்னுகிறேன் என்ற வினேக்குப் பாய் என்பது செயப்படுபொருள். ஆகவே எடுத்து வா, பின்னுகிறேன் என்ற இரண்டும் செயப்படுபொருள் குன்ருவினேகள் எனப்படும்.

(4) இந்தப் பாடத்திலிருந்து குன்றிய வினேக்கு மூன்று உதாரணங்களும் குன்ருவினேக்கு மூன்று உதாரணங்களும் தருக.

# 9. படப்பயிற்சி—I

கீழேயுள்ள படங்களை வரிசையாகப் பார்த்து, ஒவ்வொரு படத்தையும் பற்றி ஒன்றிரண்டு வாக்கியங்கள் சொல்லு. பிறகு முயல் எப்படிச் சிங்கத்தைக் கொன்றது என்ற கதையை எழுது.



## 10. இளைஞர் செஞ்சிலுவைச் சங்கம்

உங்கள் பள்ளிக்கூடத்தில் இளைஞர் செஞ்சிலுவைச் சங்கம் இருக்கிறதா? இருந்தால், அதில் நீங்கள் சேர்ந்து, அதன் உயரிய நோக்கங்களைக் கடைப்பிடித்து ஒழுகுதல் வேண்டும். பிறருக்குத் தொண்டு செய்து வாழ்வதே சீரிய வாழ்க்கை என்பதைச் செஞ்சிலுவைச் சங்கம் அறிவுறுத்துகிறது. இச்சங்கத்தின் வரலாற்றைச் சற்றே தெரிந்துகொள்வோம்.

சுமார் தொண்ணூறு ஆண்டுகட்கு முன் ஐரோப்பாவில் நடந்த ஒரு போரில் கணக்கற்ற வீரர் காயம் பட்டும் கைகால் இழந்தும் நோய்வாய்ப்பட்டும் அவதியுற்றனர். ஹென்றி டூனண்டு என்ற ஒரு பெரியார், இத்தகைய வீரர் படும் துன்பங்களைக் கண்டு மனமிரங்கி, அவர்களுக்கு உதவி புரிவதற்கென்றே ஒரு சங்கத்தை நிறுவினர். அதற்குத்தான் செஞ்சிலுவைச் சங்கம் என்று பெயர். ஒரு சிவப்புச் சிலுவையை அவர் தாம் நிலைநாட்டிய சங்கத்தின் அடையாளமாகக் கொண்டமையால், அதற்குச் செஞ்சிலுவைச் சங்கம் என்ற பெயர் ஏற்பட்டது.

போர்க் காலங்களில் காயம்பட்டும் நோயுற்றும் தவிக்கும் வீரர்களுக்குத் தொண்டு புரிவது மட்டுமே இச்சங்கத்தின் முதல் நோக்கமாயிருந்தது. நாளடைவில் இந்த நோக்கம் விசாலமடைந்தது. வெள்ளம், பஞ்சம் முதலிய காரணங்களால் துன்புற்றோருக்கு உதவியளிப்பதும் இச்சங்கத்தின் வேலையாயிற்று. தற்காலத்தில் எல்லா நாடுகளிலும் இதன் கிளை ஸ்தாபனங்கள் ஏற்பட்டுள்ளன. சாதி, நிறம், மதம் முதலிய வேற்றுமைகளைப் பாராட்டாமல் கஷ்டப்படுகிற யாவருக்கும் ஊழியஞ் செய்வதே இச்சங்கத்தின்

வேலையாயுள்ளது. மக்களின் உடல் நலனுக்காக உழைத்தல், நோயாளிகள் சிகிச்சை பெற வழி செய்தல், பூகம்பம், பஞ்சம், வெள்ளம் முதலிய காரணங்களால் தமது வீடுவாசல்களை இழந்து தவிப்போருக்கு வாழ வழி செய்தல், எல்லா நாட்டு மக்களிடையேயும் அன்பை வளர்த்தல்—இவையெல்லாம் செஞ்சிலுவைச் சங்கத்தார் புரிந்துவரும் பணிகளாம்.



இவ்வேலைகளைச் செய்வதற்கு உதவியாக, ஒவ்வொரு கிளை நிலையத்திலும் ஒன்றிரண்டு மோட்டார் வண்டிகளை இச்சங்கத்தினர் வைத்திருப்பார்கள். இந்த வண்டிகளில் செஞ்சிலுவை அடையாளம் இருக்கும். இத்தகைய வண்டிகளை நீங்கள் பார்த்திருக்கலாம். செஞ்சிலுவை ஊழியர்களும் தம் உடையில் செஞ்சிலுவை அடையாளம் அணிந்திருப்பர்.

இச்சங்கத்தின் ஒரு பிரிவே இளைஞர் செஞ்சிலுவைச் சங்கமாகும். இப்பிரிவு 1914இல் முதன் முதல் அமெரிக்காவில் ஏற்பட்டது. பிறகு எல்லா நாடு

களுக்கும் இது பரவிற்று. இளைஞர் தம் போன்ற பிற இளைஞர்களுக்கும், பொதுவாகத் தம் சமூகத்திற்கும் ஊழியஞ் செய்வதை இளைஞர் செஞ்சிலுவைச் சங்கம் கற்பிக்கிறது. பள்ளிக்கூடத்திலும் வீட்டிலும் சுகாதார விதிகளை அனுசரிக்கப் பழகுதல், நோய் முதலியவற்றால் துன்புறுவோருக்கு உதவி செய்தல், அயல் நாட்டு இளைஞருடன் தபால் மூலம் நட்பு வளர்த்தல் ஆகிய மூன்றும் இளைஞர் சங்கத்தின் நோக்கங்கள் என்று கூறலாம்.

இளைஞர் சங்கத்தில் பள்ளிக்கூடத்திலுள்ள எல்லா மாணவர்களும் சேரலாம். இளைஞர் சங்கத்தில் சேரும் மாணவர் ஓர் ஆசிரியரின் மேற்பார்வையில் தமக்குள் அதிகாரிகளைத் தேர்ந்தெடுத்துக்கொண்டு தாமே சங்க வேலைகள் எல்லாவற்றையும் செய்யப் பழக வேண்டும்.

செஞ்சிலுவை இளைஞர் தாமே தவருமல் சுகாதார விதிகளை அனுசரிக்க வேண்டும். ஊராருக்குச் சுகாதார விதிகளை எடுத்துரைக்க வேண்டும். தெருக்களில் கிடக்கும் கண்ணாடித் துண்டுகள், இரும்பு ஆணிகள், காகிதக் கிழிசல்கள், பழத்தோல்கள் முதலியவற்றைத் திரட்டுவதை ஒரு வேலையாகக் கொள்ளலாம்.

ஏழை மாணவருக்கும் நோயாளிகளுக்கும் உதவி செய்ய நிதி திரட்டலாம். பஞ்சம், வெள்ளம் முதலியவற்றால் ஊரார் அவதியுறும்போது, பெரியோருடன் சேர்ந்துகொண்டு மக்களுக்கு உதவி செய்யலாம்.

செஞ்சிலுவை இளைஞர் அயல் நாட்டு இளைஞருடன் தபால் மூலம் கடிதப் போக்குவரவு செய்யலாம். இதற்குத் தலைமைக் காரியாலயம் உதவி செய்யும்.

விசேஷமான படங்களைச் சேகரித்து, ஒரு 'ஆல்பம்' தயாரித்துப் பிறநாட்டு இளைஞர்களுக்கு அனுப்பலாம்.

மாணவர் இச்சங்கத்தில் சேருவதற்குத் தனிச் சந்தாப் பணம் எதுவும் செலுத்த வேண்டுவதில்லை. ஒரு பள்ளிக்கூடம் இச்சங்கத்தில் சேரும்பொழுது மட்டும் சிறுதொகை சந்தாச் செலுத்தவேண்டும்.

செஞ்சிலுவை நிறுவினர் பணிகள் சந்தா சீரிய கிளை ஸ்தாபனம் அவதியுறு சிகிச்சை பூகம்பம்

### அருஞ்சொற்பொருள்

கடைப்பிடித்து - அனுசரித்து. சீரிய - சிறந்த, உயர்ந்த. அவதியுறு - கஷ்டப்படு. நிறுவினர் - நிலைநாட்டினர். பணிகள் - வேலைகள், தொண்டுகள்.

### கேள்விகள்

1. செஞ்சிலுவைச் சங்கம் எந்த நோக்கத்துடன் முதலில் நிலைநாட்டப்பட்டது?
2. செஞ்சிலுவைச் சங்கத்தின் தற்கால நோக்கங்கள் யாவை?
3. செஞ்சிலுவை இளைஞர் எந்த வேலைகளைச் செய்யலாம்?

### பயிற்சி

(1) பின்வரும் சொற்களை வாக்கியங்களில் உபயோகி :—
கடைப்பிடி; நிறுவு; சந்தாப்பணம்; மேற்பார்வை.

(2) மாதிரியில் உள்ளதுபோல், சொற்களைப் பிரித்தெழுது :—
1. மனமிரங்கு = மனம்+இரங்கு
2. அனலடிக்கிறது =
3. வானளாவிய =
4. பாலமுது =

(3) வினைமுற்றுக்கள் மூன்று காலங்களில் வரும். அவை இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம்.
1. நான் நேற்றுப் படித்தேன். (இறந்தகாலம்)
2. நீ இப்பொழுது படிக்கிறாய். (நிகழ்காலம்)
3. நீ நாளைப் படிப்பாய். (எதிர்காலம்)

(4) பின்வரும் வினைமுற்றுக்களின் காலங்களைக் கூறு :—
செய்தான், வருவான், போகிறீர், பாடுவாள், ஆடினார்கள், படிக்கிறார்கள், நாடினான், குதிக்கிறீர்கள், பயந்தாள்.

## 11. குமணன்

முற்காலத்தில் நம் தமிழ் நாட்டில் வள்ளல்கள் பலர் வாழ்ந்தனர். அவர்கள், யார் எதைக் கேட்ட போதிலும் அளவில்லாமல் கொடுத்து மகிழ்ந்தனர். அதனுலேயே அவர்களுக்கு 'வரையாது கொடுக்கும் வள்ளல்கள்' என்ற பெயருண்டாயிற்று. அவர்கள் இரப்போருக்கு இல்லை யென்னது கொடுத்து உதவி செய்வதையே தங்கள் கடமையாகக் கருதினுர்கள்.

இத்தகைய வள்ளல்களில் குமணன் என்னும் சிற்றரசனும் ஒருவன். அவன் முதிரம் என்ற மலை யையும் அதையடுத்துள்ள சில ஊர்களையும் ஆண்டு வந்தான். புலவர்களைக் கண்டால் அவன் மகிழ்வான். அவர்களுக்குப் பொன்மாரி பொழிவான். அக்காலத் தில் அவனுக்கு இணையான வள்ளல்கள் யாரும் இலர். புலவர் பலர் அவன் சபையை யடைந்து, அவன் புகழ்பாடிப் பரிசு பெற்றனர். அவனது புகழ் தமிழ் நாடெங்கும் பரவியிருந்தது.

குமணனுக்கு ஒரு தம்பி இருந்தான். அவனை இளங்குமணன் என்றும் அமணன் என்றும் அழைப் பார்கள். அமணன் தனது தமையனுக்கு நேர்மாருன குணங்களுடையவன். அவனுக்குத் தன் தமையன் செய்கை பிடிக்கவில்லை. "இப்படி வருவோர் போவோ ருக்கெல்லாம் அள்ளி அள்ளிக் கொடுத்தால், கொஞ்ச நாளில் ராஜ்யமே போய்விடும்," என்று எண்ணி னன். அமணனுக்குப் பல கொடியவர்கள் சிநேக மாயினர். அவர்களது தூண்டுதலினுல் அவன் தன் அண்ணனைத் தொலைக்க வழி தேடினுன்.

இதையறிந்த குமணன், தன் தம்பியால் நாட்டுக்கே கேடு விளையும் என்றஞ்சினுன். ஆனுல்

கொடியவர் நட்புக்கொண்டுள்ள தம்பிக்கு அச்சமயத்தில் என்ன புத்தி சொன்னுலும் பயனிராது என்று எண்ணினுன். ஆதலால் அவனையே அரசனுக்கத் தீர்மானித்தான். குமணன் தான் தீர்மானித்தபடியே செய்வதற்காக ஒருநாள் இளங்குமணனை யழைத்து, "தம்பி! உனது எண்ணம் என்ன?" என்று கேட்டான். அதற்கு அமணன், "அண்ணு! நீ அளவுக்கு மிஞ்சிச் செலவு செய்து வருகிருய். உன்னுல் நம் நாடு வறுமையாகிக் கொண்டு வருகிறது. ஆதலின், நாட்டை என்னிடம் ஒப்புவித்து விடு," எனக் கூறினுன். குமணனும் இதையே எதிர்பார்த்தானுதலால், ஒன்றும் பேசாது அவனுக்கு முடிசூட்டிச் சில அறவுரைகளையும் கூறிவிட்டுக் காடு நோக்கிச் சென்ருன்.

அரசாட்சி தன் கைக்கு வந்ததும் இளங்குமணன்பாடு கொண்டாட்டமாய் விட்டது. தன் விருப்பப்படி அரசாட்சி செய்ய ஆரம்பித்தான். இவனது கொடுங்கோன்மையைப் பொறுக்காமல் மக்கள் கலகம் செய்யத் தொடங்கினர். அதைக் கண்ட அவனது துன்மந்திரிகள், "குமணன் உயிருடன் இருக்கும் வரை, அவனுக்காக இவர்கள் கலகம் செய்துகொண்டுதான் இருப்பார்கள். அவனைக் கொன்றுவிட்டால் இவர்கள் அடங்கிவிடுகிருர்கள்," என்று சொல்லித் தூண்டினர். இளங்குமணன் உடனே, "குமணனது தலையைக் கொணர்வோருக்கு ஆயிரம் வராகன் பரிசு," எனப் பறை சாற்றினுன். அது கேட்டு மக்கள் யாவரும் நடுங்கினர்.

இச்சமயத்தில் சாத்தனுர் என்ருெரு புலவர், குமணனிடம் பரிசு பெறுவதற்காக அங்கு வந்தார். வந்தவர் அங்கு நிகழ்ந்த செய்திகளைக் கேட்டு மனம் வருந்தினுர். எப்படியாவதுனுலும் குமணனைப் பார்க்காமல்

செல்வதில்லை யென்று தீர்மானித்து, குமணன் இருந்த காட்டை அடைந்தார். அங்கே பல இடங் களிலும் அலைந்து திரிந்து முடிவில் குமணனைக் கண்டு தாம் வந்த காரியத்தைக் கூறினர்.

அது கேட்ட குமணன், "புலவரே! நான் அர சாண்ட காலத்தில் வந்தீரில்லையே! இப்பொழுது நான் என்ன செய்வேன்?" என்று கூறிச் சிறிது யோசித்தான். பிறகு திடீரென்று, "புலவரே! இப் பொழுதும் ஓர் வழி இருக்கிறது.

அந்தநாள் வந்திலை அருங்கவிப் புலவோய்!
இந்தநாள் வந்துநீ நொந்தனை யடைந்தாய்!
தலைதனைக் கொண்டுபோய்த் தம்பிகைக் கொடுத்து
விலைதனைப் பெற்றுன் வறுமைநோய் களையே.

"ஒன்றுக்கும் உதவாத என் தலைக்கு எனது தம்பி ஆயிரம் வராகன் மதிப்பு வைத்திருக்கிறன். ஆதலின் எனது தலையை வெட்டிக் கொண்டுபோய், அப்பரிசைப் பெற்றுக் கொள்ளும். இப்பொழுது என் ஞற் செய்யக் கூடியது இவ்வளவே," என்று கூறித் தன் வாளை நீட்டினன். என்னே, குமணனது கொடைத்திறம்! தம் உயிரையும் புலவருக்காகக் கொடுக்க இசைந்த அவனது வள்ளல் தன்மையை எவ்வாறு புகழ்வது!

பார்த்தார் புலவர். உயிரையும் தம்பொருட்டுத் தியாகம் செய்ய முன்வந்த குமணனைக் காப்பாற்ற எண்ணினர். ஒரு பொய்த் தலையைச் செய்து அமணனை ஏமாற்ற நினைத்தார். ஆனல் தான் இல் லாத சமயத்தில், குமணன் வேறு யாருக்காவது தன் தலையைக் கொடுத்து விட்டால் என்ன செய்வது என்று நினைத்துக் குமணனை நோக்கி, "அரசே! தாங்கள், தங்கள் தலையை எனக்குக் கொடுத்து

விட்டீர்கள். நான் திரும்பி வரும்வரை அத்தலை தங்கள் உடலிலேயே இருக்கட்டும். வேறு யாருக்கும் கொடுத்து விடக்கூடாது," என்று கூறினர்.

சாத்தனர், குமணன் தலைபோல் ஒரு பொய்த் தலை செய்து, இளங்குமணனிடம் சென்று காட்டிப்



பரிசு கேட்டார். தலையைக் கண்டதும் இளங்குமணன் நடுங்கிவிட்டான். 'தான் ஆடாவிடினும் தன் சதை யாடுமல்லவா ?' அவன் குணம் முற்றிலும் மாறிவிட்டது. 'தமையன் இறந்துவிட்டான்' என்று வருந்திக் கதறி யழுதான்.

அது கண்ட புலவர் அவனைச் சமாதானம் செய்து, "குமணனை உயிர்பெறச் செய்தால் என்ன தருவாய் ?" என்று கேட்டார். இளங்குமணனும் சிறிதும் தயங்காது, "என் உயிரையும் தருவேன்," என்றான். புலவர் இளங்குமணனை யழைத்துச் சென்று குமணன் முன் விட்டனர். அமணனும் தன் அண்ணனைக் கண்டதும் அவன் கால்களில் விழுந்து, தன்னை மன்னிக்குமாறு வேண்டினான். குமணனும் தன் தம்பி நல்வழிப்பட்டமைக்கு மனமகிழ்ந்து அவனைத் தழுவித் தேற்றினான்.

தம்பியின் வேண்டுகோளுக்கும் புலவர் ஆணைக்கும் இணங்கி, குமணன் திரும்பவும் நாட்டுக்கு வந்து முடிசூட்டிக் கொண்டான். துன்மந்திரிகள் குமணனைக் கண்டதும் இருந்தவிடம் தெரியாமல் ஓடிவிட்டனர். குடிகளும் மகிழ்ச்சியடைந்தனர். சாத்தனார் மனமகிழும்படியாக வேண்டிய பரிசுகளைக் கொடுத்தனுப்பிவிட்டு, குமணன் முன்போல நாட்டை ஆண்டு வந்தான். குமணனும் அமணனும் இணைபிரியாது வாழ்ந்து வந்தனர்.

| | | | |
|---|---|---|---|
| தழுவி | கொடை | பொன்மாரி | வள்ளல் |
| அள்ளி | துன்மந்திரி | சாற்றினான் | அறவுரை |
| கடமை | முடிசூட்டி | நொந்தனை | நேர்மாறான |
| வராகன் | தொலைக்க | தூண்டுதல் | கொணர்வோர் |

அருஞ்சொற்பொருள்

தொலைக்க - அழிக்க. பொன்மாரி - பொன்மழை. சாற்றினான் - கூறினான். நொந்தனை - துன்பம்.

கேள்விகள்

1. குமணனுடைய தம்பியின் விருப்பம் யாது ?
2. தம்பியின் கருத்தை அறிந்த குமணன் என்ன செய்தான் ?
3. காட்டில் வாழ்ந்த குமணனைக் கொல்ல அமணன் என்ன வழி செய்தான் ?

4. சாத்தனுர் குமணனை எப்படி மறுபடியும் அரசனுக்கினுர்?
5. 'தான் ஆடாவிடினும் தன் சதை ஆடும்' என்பது எந்தச் சந்தர்ப்பத்தில் உண்மையாயிற்று?

## பயிற்சி

(1) உன் சொந்த வாக்கியங்களில் பின்வரும் சொற்களை அமைத்து எழுது :—
அள்ளி, கொடை, தூண்டு.

(2) எதிர்மொழி கூறு :—
வறுமை, துன்மந்திரி, நல்வழி, பிடிக்கவில்லை, இணங்கி, அளவில்லாமல்.

(3) மாதிரியில் காட்டியதுபோல் வாக்கியங்களைச் சேர்த்து எழுது :—

குமணன் புலவர்களைக் கண்டால் மகிழ்வான். அவன் அவர்களுக்குப் பரிசுகள் கொடுப்பான்.

—குமணன் புலவர்களைக்கண்டு மகிழ்ந்து அவர்களுக்குப் பரிசுகள் கொடுப்பான்.

1. புலவர் பலர் அவன் சபையை அடைந்தனர். அவர்கள் அவன் புகழைப் பாடினர்.

2. சாத்தனுர், குமணன் தலைபோல் ஒரு பொய்த் தலை செய்தார். அவர் அதை அமணனிடம் காட்டினுர்.

(4) மாதிரியில் காட்டப்பட்டிருப்பதுபோல், எழுவாய்க்குப் பொருத்தமாகப் பின்வரும் கட்டங்களை நிரப்பு :—

| எழுவாய் | இறந்தகாலம் | நிகழ்காலம் | எதிர்காலம் |
|---|---|---|---|
| நான் | ஓடினேன் | ஓடுகிறேன் | ஓடுவேன் |
| நாங்கள் | | | |
| நீ | | | |
| நீங்கள் | | | |
| அவன் | | | |
| அவள் | | | |
| அவர் | | | |
| அது | | | |
| அவை | | | |



## 12. சைக்கிள்

தங்கையே, பார்! தங்கையே, பார்!
சைக்கிள் வண்டி இதுவே பார்! 1
சிங்கார மான வண்டி,
சீமையிலே செய்த வண்டி. 2
இரும்பாலே செய்த வண்டி
எங்கெங்கும் ஓடும் வண்டி. 3
மாடில்லை, குதிரையில்லை,
மாயமதாய்ப் பறந்திடும், பார். 4
தீயில்லை, புகையும் இல்லை,
தீவிரமாய்ச் சென்றிடும், பார். 5
காலாலே மிதிப்பதனுல்,
கடும்விசையில் போயிடும் பார். 6
ஒன்றன்பின் ஒன்ருக
உருளும்பை தாக்களைப் பார். 7
அக்காளும் தங்கையும் போல்
அவைபோகும் அழகைப் பார். 8

—தேசிக விநாயகம் பிள்ளை

அருஞ்சொற்பொருள்

சிங்காரமான - அழகான. தீவிரமாய் - வேகமாக. பைதாக்கள்- சக்கரங்கள்.

**கேள்வி**

**இச்செய்யுளைத் தழுவி, சைக்கிள் வண்டியைப் பற்றிச் சில வாக்கியங்கள் எழுது.**



## 13. பொங்கல் விழா

மார்கழி மாதம் முடிந்து தை மாதம் தொடங்கும் பொழுது, நம் தமிழ் நாட்டில் குளிர் காலம் அனேக மாகக் கழிந்து விடுகிறது. அதற்குள் விவசாயிகளின் உழைப்பும் முற்றுப் பெற்று வீடுகளில் புதுநெல் நிரம்பியிருக்கும். நெல் விளைவதற்குத் தேவையான மழையையும் வெப்பத்தையும் அளித்த தெய்வங் களான இந்திரனையும் சூரியனையும் வணங்கும் நாட் களே பொங்கல் விழா நாட்களாகும்.

பொங்கல்விழா என்பது தொன்றுதொட்டே நம் தமிழ் நாட்டில் கொண்டாடப் பெற்று வருகின்றது. பண்டைக் காலத்தில் இது இந்திர விழா என்ற பெய ருடன் கொண்டாடப் பெற்றதாகத் தெரிகிறது.

பொங்கல் விழா வரப்போவதைக் கருதி மார்கழி மாதக் கடைசி நாட்களிலேயே வீட்டுச் சுவர்களையும் தரையையும் பழுது பார்த்து, காரை, மண் முதலியன பூசி வைப்பார்கள். வீடுகளுக்கு வெள்ளையடிப்பார்கள். மார்கழி மாதம் கடைசிநாள் போகிப்பண்டிகை எனப் படும். போகி என்பது இந்திரனுடைய பெயர்களில் ஒன்று. ஆகையால் அன்றுதான் இந்திர விழா நாள் ஆகும். அன்று வீட்டிலிருக்கும் பழைய பாய், கூடை, முறம், துடப்பம் போன்ற பொருள்களை வீட்டுக்கு

முன்னே வைத்துக் கொளுத்துவார்கள். அந்தத் தீயின் முன் சிறியோரும் பெரியோரும் அமர்ந்து பறை கொட்டி ஆடிப்பாடி மகிழ்வர். பழைய பானை களைத்தூர எறிந்துவிடுவார்கள். இவைகளுக்குப் பதிலாக, புதுப்பானை, பாய், கூடை முதலியபொருள்களை வாங்கி உபயோகத்துக்கு வைத்துக் கொள்வார்கள்.

அழுக்குப் பிடித்த பழைய பாய், கூடை முதலிய பொருள்களை ஆண்டு தோறும் எரித்துவிட்டு, புதிய பொருள்களை உபயோகிப்பது நம் சுகாதாரத்துக்கு அவசியமான ஒரு நற்பழக்கமாகும். அவற்றிலுள்ள கிருமிகள் இறந்துவிடும். அதுபோலவே ஆண்டு தோறும் வீட்டைப் பழுதுபார்த்து வெள்ளையடிப்பதும் நம் உடல் நலத்துக்கு நல்லது. இதனுல் மூட்டைப் பூச்சிகள் இறந்து விடுகின்றன.

இவ்வாறு வீட்டையும் வீட்டிலுள்ள சிலபொருள் களையும் புதுப்பித்துவிட்டு, எண்ணெய் தேய்த்துக் குளிப்பார்கள். பிறகு புதிய தின்பண்டங்கள் தயாரித்து இந்திரனுக்குப் படைத்து வணங்குவார்கள். அவற் றைத் தாமும் உறவினரும் உண்டு மகிழ்வார்கள்.

தை மாதம் முதல்நாள் பொங்கல் பண்டிகை ஆகும். அன்று வீட்டை நன்கு மெழுகிச் சுத்தமாக்கி, செம்மண்ணினுலும் மாவினுலும் கோலங்கள் போடு வார்கள். வீட்டு வாயிலிலும் அழகிய பெரிய கோலங் கள் வரையப்படும். பூசணிப் பூக்களைப் பறித்துக் கோலங்களின் இடையிடையே வைத்து அழகு செய் வர். அன்றுதான் அந்த ஆண்டின் புது அரிசியை முதன் முதலாகச் சோறு சமைப்பார்கள். இதற்காக மூன்று மண்கட்டிகளின் மீது புதுப்பானையை வைத்து அதில் புது நெல்லைக் குத்திக் கிடைத்த அரிசியைப் போட்டுச் சோருக்குவர். புதுப்பானைக்கும் அலங்

காரம் செய்திருக்கும். மஞ்சள் கொத்தையும் கரும்புத் துண்டையும் பானையின் கழுத்தில் கட்டுவர். உலையில் சிறிது பாலையும் ஊற்றுவர். சோறுபொங்கும்பொழுது வீட்டில் உள்ள யாவரும் 'பொங்கலோ பொங்கல்!' என்று கூவித் தம் மகிழ்ச்சியை வெளியிடுவர். பொங்கல் பானை பொங்கி, சோறு பதமானவுடன் அதை இறக்கி வைத்து, தாம் தொழும் தெய்வத்திற்கும் சூரியனுக்கும் படைப்பார்கள். பிறகு புது ஆடைகள் அணிந்து கொண்டு அந்தப் பொங்கலையும், வேறு பல உணவுகளையும் தம் உறவினருடன் உண்பார்கள்.

இந்திரனுக்கும் சூரியனுக்கும் தம் நன்றியைத் தெரிவித்துப் பூசை செய்வதுடன் நம் குடியானவர்கள் திருப்தி யடைவதில்லை. நம் நாட்டுப் பயிர்த் தொழிலுக்குப் பல வழிகளில் மாடுகள் உதவுகின்றன. உழுதல், பரம்படித்தல், கிணற்று நீரைக் கவலைகளினால் இறைத்தல், வண்டி இழுத்தல், நெல் கதிர்களை மிதித்து வைக்கோலையும் தானியங்களையும் பிரித்தலாகிய பிணையலடித்தல் முதலிய பல வேலைகளைச் செய்வதற்கு மாடுகளே பேருதவி புரிகின்றன. மேலும் மாடுகளின் மலஜலக் கழிவுகள் நிலத்திற்குச் சிறந்த எருவாகின்றன. இவ்வளவு உதவிகளைச் செய்யும் மாடுகளுக்குத் தம் நன்றியை விவசாயிகள் தெரிவிக்கும் நாளே மாட்டுப் பொங்கல் ஆகும்.

தை மாதம் இரண்டாம் தேதி மாட்டுப் பொங்கல் விழாக் கொண்டாடப்படுகிறது. அன்று மாடுகளை நன்ருகக் குளிப்பாட்டுவார்கள். கொம்புகளுக்கு வர்ணம் தீட்டிக் கழுத்தில் சதங்கைகளைக் கட்டுவார்கள். கொம்பைச் சுற்றி ஒரு புதுத் துணியைக் கட்டுவார்கள். அன்றும் புது அரிசிச் சோறு பொங்கி அதை மாடுகளுக்குக் கொடுப்பார்கள். மாலை வேளையில் மாடு

களை அவிழ்த்துச் சிறிது நேரம் ஓடவிட்டுப் பிறகு பிடித்துவந்து கட்டிவைப்பார்கள். "வாயில்லாசீவன்" என்று சொல்லக்கூடிய மாடுகளுக்கும் தம் நன்றியை வெளிப்படுத்தும் இந்த வழக்கம் மிகச் சிறந்ததாகும்.

மாட்டுப் பொங்கலுக்கு மறுநாள் கன்றுப் பொங்கல் அல்லது காணும் பொங்கல் என்று சொல்லப்படும். அன்று எல்லோரும் தம் நண்பர்களையும் உறவினரையும் கண்டு பேசி வருவார்கள். பொங்கல் நாளில் ஒருவரையொருவர் காணும்பொழுது, "பால் பொங்கிற்று?" என்று கேட்டுக் கொள்வார்கள்.

போகிப் பண்டிகையிலிருந்து தொடங்கி நான்கு நாட்கள் தமிழ் நாடெங்கும் மகிழ்ச்சியும் கொண்டாட்டமுமாயிருக்கும். ஆனி, ஆடி மாதங்களில் தொடங்கிய பயிர்த்தொழில் பெரும்பாலும் மார்கழி மாதத்தில் முடிந்து விடுகிறது. இந்த வேலையில் ஈடுபட்ட விவசாயிகளின் களைப்பைப் போக்கி, மனத்திற்கு இன்பமும் உற்சாகமும் தரும் கொண்டாட்டமாக அமைந்துள்ளது இப்பொங்கல் விழா.

| | | |
|---|---|---|
| முற்றுப் பெற்று | பதம் | அலங்காரம் |
| தொன்றுதொட்டு | போகி | புரிகின்றன |
| படைப்பார்கள் | சீவன் | பழுதுபார் |

அருஞ்சொற்பொருள்

முற்றுப்பெற்று - முடிந்து. தொன்று தொட்டு - பண்டைக் கால முதல். பழுதுபார் - குறைகளைச் சரிப்படுத்து. போகி - இந்திரன். படைப்பார்கள் - முன்னே வைப்பார்கள். புரிகின்றன - செய்கின்றன. அலங்காரம் - அழகு செய்தல். சீவன் - உயிர்.

கேள்விகள்

1. பொங்கல் விழா நாட்கள், என்று தொடங்கி என்று முடிகின்றன?
2. போகிப்பண்டிகையின் பொழுது வீடுகளை எவ்வாறு சுத்தம் செய்கின்றனர்?

3. பழைய பாய், கூடை முதலியவற்றைக் கொளுத்துவது ஏன் நல்லது?
4. முதன் முதல் புது நெல்லரிசி என்றைய தினம் சோருக் கப்படுகிறது? அன்று புதுப்பானையில் பொங்கும் விதத்தை விவரித்து ஐந்து வாக்கியங்கள் எழுது.
5. மாடுகள் பயிர்த்தொழிலுக்கு எவ்வாறு உதவுகின்றன?
6. மாட்டுப்பொங்கல், காணும் பொங்கல்—இந்த நாட்களின் சிறப்பு என்ன?

### பயிற்சி

(1) உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது:—
முற்றுப்பெறு; பழுதுபார்; தொன்றுதொட்டு.

(2) பின்வரும் சொற்களைப் பெயர்ச்சொல்லாகவும் வினைச்சொல்லாகவும் வாக்கியங்களில் உபயோகி:—
1. நம் தேசத்திற்குப் பாரத நாடு என்று பெயர். (பெயர்ச்சொல்)
2. அவன் கல்வியறிவையே நாடுகிறன். (வினைச்சொல்)

தை; நெய்; திரி; பார்.

## 14. தபால்முறை வளர்ந்த விதம்

(உரையாடல்)

**சேகர்:** ஐயா! இப்பொழுது தபாலாபீசுகளின் நூற்றுண்டுக்கொண்டாட்டம் என்று ஏதோ கொண்டாடுகிறுர்களே, அது எதற்கு?

**ஆசிரியர்:** இது தெரியாதா உனக்கு! 1854 அக்டோபர் மாதம் முதல் தேதியன்று, தபால் கட்டணம் செலுத்துவதற்கு 'ஸ்டாம்பு' வாங்கி ஒட்டியனுப்பும் முறை அமுலுக்கு வந்தது. அன்று முதல், 1954ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் முதல் தேதிவரை நூறுண்டுகள் முடிந்துவிட்டன. ஆகையால்தான் இந்தக் கொண்டாட்டம்.

**சேகர்:** ஆங்கிலேயர், நம் நாட்டுக்கு வருவதற்குமுன் இங்கே தபால் முறை இருந்ததில்லையா?

ஆசிரியர்: இருந்தது, சேகர்! பண்டைக் காலங்களில் புருக்களைப் பழக்கி, அவற்றின் கழுத்தில் செய்திக் கடிதங்களைக் கட்டிவிட்டார்கள். அவை ஓர் ஊரிலிருந்து மற்றோர் ஊருக்கு அச்செய்திகளைக் கொண்டு சேர்த்தன. பிறகு ஆட்கள் மூலமாகவும் குதிரைச் சவாரி செய்பவர் மூலமாகவும் கடிதங்களை அனுப்பும்முறை அமுலுக்கு வந்தது. ஆங்கிலேயர் நம் நாட்டை ஆண்ட காலத்தில் தான் தபால் முறை மிகவும் வளர்ச்சியுற்றது.

சேகர்: சுமார் 100 ஆண்டுகட்கு முன் தபால் கடிதங்கள் எவ்வாறு எடுத்துச் செல்லப்பட்டன ?

ஆசிரியர்: 1853இல் தான் முதல் ரயில் பாதை நம் நாட்டில் ஏற்பட்டது. அதற்கு முன், ஆட்சுமையாகவும், குதிரைகள் மீதும் தான் தபால்கள் எடுத்துச் செல்லப்பட்டன. ரயில் பாதைகள் ஏற்பட்டபிறகு, ரயில் வண்டிகளில் தபால்கள் எடுத்துச் செல்லப்படவேண்டுமென்று அக்காலத்தில் இந்தியாவின் கவர்னர் ஜெனரலாக இருந்த டல்ஹெளஸி பிரபு சட்டம் பிறப்பித்தார். ரயில் வண்டியிலேயே தபால் வண்டியொன்று அமைக்கப்பட்டது. அதில் தபால் கடிதங்களை ஊர்வாரியாகப் பிரிக்க, தபால் ஊழியர்கள் அதிலேயே பிரயாணம் செய்ய ஏற்பாடு செய்யப்பட்டது.

சேகர்: ஐயா! தபால் முறை வளர்ச்சியடைந்துள்ளது என்கிறீர்களே, அதன் பொருள் எனக்கு விளங்கவில்லையே !

ஆசிரியர்: அப்படிக் கேள், சொல்கிறேன். நூறு ஆண்டுகளுக்கு முன் நம் நாட்டில் சுமார் 700 தபால் ஆபீசுகளே இருந்தன. 1870இல் ஐயாயிரத்துக்கு மேற்பட்ட ஜனத்தொகையுள்ள

எல்லா நகரங்களிலும் தபால் ஆபீசுகள் ஏற்பட்டன. 1947ஆம் ஆண்டில் சுமார் 22000 தபாலாபீசுகள் இருந்தன. இப்பொழுது சுமார் 46000 தபாலாபீசுகள் ஏற்பட்டுள்ளன.

**சேகர்:** நாற்பத்தாறுயிரம் தபாலாபீசுகளா!

**ஆசிரியர்:** ஆம். இப்பொழுது நம் அரசாங்கத்தார் பெரிய கிராமங்களிலெல்லாம் தபாலாபீசுகள் ஏற்படுத்தி வருகிறுர்கள்.

**சேகர்:** இன்னும் என்னவிதமான வளர்ச்சி ஏற்பட்டுள்ளது?

**ஆசிரியர்:** முன்பெல்லாம் ஓரிடத்திலிருப்பவர் அயலூரில் இருப்பவருக்குப் பணம் அனுப்ப வேண்டுமானுல் அரசாங்கக் கஜானுவில் தான் பணத்தைக் கட்டவேண்டும். 1880ஆம் ஆண்டில் தபால் ஆபீசுகளில் 'மணியாடர்'கள் ஏற்றுக்கொள்ள ஏற்பாடு செய்யப்பட்டது. மக்கள் சிறு தொகைகளைச் சேமித்து வைத்துக்கொள்ள வசதியளிப்பதற்கு, தபாலாபீசுகளில் 'சேவிங்ஸ்பாங்கு'கள் ஏற்படுத்தப்பட்டன. தந்தி முறையில் செய்தி அனுப்புவதையும் தபாலாபீசுகள் செய்யத் தொடங்கின.

**சேகர்:** ஐயா! இப்பொழுது சென்னைத் தபாலாபீசில் ஒரு கடிதம் போட்டால் அது டில்லிக்கு எப்பொழுது போய்ச் சேரும்?

**ஆசிரியர்:** இப்பொழுதெல்லாம் சாதாரணக் கடிதங்கள் ஆகாய விமானங்களில் எடுத்துச் செல்லப்படுகின்றன. ஆகையால் இன்று சென்னைத் தபாலாபீசில் நீ போடும் கடிதம் நாளைக்கே டில்லிக்குச் சென்றுவிடுகிறது. எங்கெல்லாம் ஆகாய விமானங்கள் செல்கின்றனவோ, அங்கெல்லாம்





சாதாரணத் தபால்களை விமானங்களே எடுத்துச் செல்கின்றன. விமானத் தபால் ஏற்படுவதற்கு முன் கடிதம் ரயில் வண்டியில் டில்லியை அடைய இரண்டு நாட்களாயிற்று. சுமார் நூறு ஆண்டு களுக்கு முன் ரயில்வண்டிகள் இல்லையல்லவா? அப்பொழுது ஒரு கடிதம் சென்னையிலிருந்து டில் லியை அடையச் சுமார் இரண்டு வாரமாயிற்று.

சேகர்: ரயில் வண்டிகளும் விமானங்களும் வேகமாகச் செல்வதால்தான், தபால்களும் சீக்கிரம் நமக்குக் கிடைக்கின்றன. இல்லையா, ஐயா?

ஆசிரியர்: ஆம். நம் தபாலாபீசுகள் எவ்வளவு வளர்ச்சியடைந்துள்ளன என்பதை மற்ருெரு விஷயத்திலிருந்தும் தெரிந்து கொள்ளலாம். நூறு ஆண்டுகளுக்கு முன் நம் நாடு முழுவதும் இருந்த தபாலாபீசுகளில், ஒருவருடத்தில் சுமார் 3000 தபால்களே போடப்பட்டன. ஆனல் தற் காலத்தில் ஒவ்வொரு நாளும் சுமார் 70 லட்சம் தபால்கள் போடப்படுகின்றன.

சேகர்: என்ன ஐயா, எழுபது லட்சமா!

ஆசிரியர்: எழுபது லட்சம்தான். அவற்றில் எல்லாம் ஒரே மொழியில் விலாசம் எழுதப்பட்டுள்ளதா? அதுவுமில்லை. சுமார் 30 மொழிகளில் விலாசங் கள் எழுதப்படுகின்றன. இவற்றை யெல்லாம் படித்துப் பட்டுவாடாசெய்ய எத்தனை சிப்பந்தி கள் இருக்கவேண்டுமென்று பார்த்துக்கொள்.

சேகர்: இப்பொழுது நம் நாட்டில் எத்தனை தபால் சிப்பந்திகள் இருக்கிருர்கள், ஐயா?

ஆசிரியர்: இப்பொழுது நம் தபாலாபீசுகளில் சுமார் $2\frac{1}{2}$ லட்சம் தபால் ஊழியர்கள் வேலை செய் கிருர்கள்.

சேகர்: தபாலாபீசுகள் நமக்கு எவ்வளவு அவசிய மென்று இப்பொழுது தெரிந்து கொண்டேன், ஐயா!

| | | |
|---|---|---|
| கட்டணம் | அயலூர் | சேவிங்ஸ் பாங்கு |
| சிப்பந்தி | அமுல் | மணியார்டர் |
| ஆட்சுமை | கஜானு | பட்டுவாடா |

### அருஞ்சொற்பொருள்

கட்டணம் - செலுத்தவேண்டிய பணம். அமுல் - ஓர் உத்தரவுப்படி நடக்க வேண்டுமென்று கட்டளையிடுதல். கஜானு - பொக்கிஷம். மணியார்டர் - அயலூரிலுள்ளவருக்குத் தபால் மூலம் பணம் அனுப்புதல். சேவிங்ஸ் பாங்கு - மீதப்படும் பணத்தைப் போட்டு வைக்கும் நிதி. சிப்பந்தி - ஊழியன்.

### கேள்விகள்

1. தபால் 'ஸ்டாம்பு'கள் எப்பொழுது முதன் முதல் உபயோகத்திற்கு வந்தன?
2. ரயில் வண்டிகள் இல்லாத பொழுது தபால்கள் எப்படி அனுப்பப்பட்டன?
3. மணியார்டர் என்ருல் என்ன?
4. நம் நாட்டில் தபால்முறை வளர்ச்சியுற்றிருப்பதற்கு உதாரணங்கள் கொடு.

### பயிற்சி

(1) பின்வரும் சொற்களை வாக்கியங்களில் உபயோகி:—
அமுல், ஆட்சுமை, சிப்பந்தி, அயலூர்.

(2) பின்வரும் சொற்களைச் சேர்த்து எழுது:—

| | | | | |
|---|---|---|---|---|
| அவனுக்கு | + | கொடுத்தான் | = | அவனுக்குக் கொடுத்தான். |
| எனக்கு | + | தருவான் | = | |
| அவரை | + | கண்டேன் | = | |
| யாரை | + | சீறினன் | = | |

(3) பின்வரும் வாக்கியங்களிலுள்ள வினைமுற்றுக்களின் காலத்தைக் கூறு:—
1. இராமன் வருவான்.
2. மாணவர்கள் விளையாடுகிருர்கள்.
3. ஆசிரியர் நேற்று நன்ருகக் கற்பித்தார்.

## 15. சர்க்கரை

சர்க்கரை எல்லோருக்கும் தெரிந்த பொருள். அது மிகவும் இனிமையானது; உணவுக்கு முக்கியமாய் வேண்டியது. சர்க்கரையில் பலவிதங்கள் உண்டு. அவை பழுப்புச் சர்க்கரை, வெள்ளைச் சர்க்கரை, மணல் சர்க்கரை, குழைவுச் சர்க்கரை என்பனவாம். எல்லா வகைகளும் தித்திப்பாகவே இருக்கும்.

சர்க்கரை முக்கியமாய்க் கரும்பின் சாற்றிலிருந்தே செய்யப்பட்டு வந்தது. ஆனால் ஐரோப்பாவில் பீட் என்னும் ஒரு வகைக் கிழங்கிலிருந்தும் வட அமெரிக்காவில் சர்க்கரை மரம் என்னும் மரத்தின் சாற்றிலிருந்தும் சர்க்கரை செய்யப்படுகின்றது. நம் இந்தியாவிலும், சீனாவிலும் சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே கரும்பு இருந்ததாகத் தெரிய வருகிறது. இந்தியாவிலிருந்துதான் கரும்பு மற்ற நாடுகளுக்குக் கொண்டு போகப்பட்டது. கரும்பு உஷ்ணப் பிரதேசங்களிலேயே பயிராகின்றது.

கரும்பில் செங்கரும்பு, வெண்கரும்பு, நாமக் கரும்பு என்று பல வகைகள் உண்டு. இவற்றில் செங்கரும்பே மிகவும் தித்திப்பானது. கரும்பு ஆறு அடி முதல் பன்னிரண்டு அடி உயரம் வரை வளரும். இதில் பல கணுக்கள் உண்டு. இது ஒரு அங்குலம் முதல் இரண்டங்குலம் வரை பருமன் உள்ளது. விதையிலிருந்து கரும்பு உண்டாவதில்லை. ஆனால் கருப்பங்கழியைக் கணுக்களுடன் துண்டு துண்டாய் நறுக்கிப் பூமியில் நட்டுப் பயிராக்குவார்கள். நட்ட ஒரு ஆண்டிற்குள் அது நன்ருய் வளர்ந்துவிடும். கரும்பின் நுனியில் பச்சையான நீண்ட இலைகள் உண்டு. அப்பாகத்தைக் கொழுத்தாடை என்று சொல்வர்.

கரும்பின் அடிப்பாகம் மிகவும் இனிப்பாகவும் கொழுத் தாடைப் பாகம் சற்று உப்பாகவும் இருக்கும்.

முற்றிய கருப்பங் கழிகளைத் துண்டுகளாய் நறுக்கி, பின்பு அவற்றைக் கரும்பாலைகளிற் கொடுத் துச் சாறு பிழிவார்கள். கரும்பாலை என்பது இரும்பு உருளைகள் உள்ள ஓர் இயந்திரம். இந்த ஆலையை



இரண்டு மாடுகள் இழுத்துக் கொண்டே சுற்றிச் சுற்றிவரும். ஆலையின் அடியில் பெரிய பாண்டம் வைத்திருப்பார்கள். ஆலை சுற்றும்பொழுது, ஒருவன் கரும்புத் துண்டுகளை இரும்பு உருளைகளுக்கு இடை யில் கொடுத்துக்கொண்டே யிருப்பான். இரும்பு உருளைகள் அத்துண்டுகளை நசுக்கி, சாற்றைப் பிழிந்துவிடும். பிழியப்படும் சாறு முழுவதும் கீழே வைக்கப்பட்டுள்ள பெரிய பாண்டத்தில் விழும்.

இவ்வாறு எடுக்கப்படும் சாற்றையெல்லாம், ஈயம் பூசிய பெரிய கொப்பரையில் விட்டு, அடுப்பின்மேல் வைத்துக் காய்ச்சுவார்கள். காய்ச்சும்போது சிறிது

சிறிதாகச் சுண்ணும்பு நீர் சேர்ப்பார்கள். அவ்வாறு சேர்த்தால், சாற்றில் உள்ள அழுக்கெல்லாம் நுரை யாக மேலே வரும். இவ்வழுக்கு நுரையை அப்போ தைக்கப்போது நீண்டகரண்டியால் எடுத்துவெளியே போடுவார்கள். கொப்பரையில் உள்ள சாறு, நன்ரு கக் காய்ந்த பின் பாகு ஆகும். இப்பாகை நன்ருய்க் காய்ச்சி, மரத் தொட்டிகளிலும் மர அச்சுக்களிலும் ஊற்றி ஆறவைப்பார்கள். ஆறிய பிறகு அது வெல்லமாக மாறும். அச்சுக்களில் ஊற்றியது அச்சு வெல்லமென்றும், தொட்டிகளில் ஊற்றியது உருண்டை வெல்லமென்றும் சொல்லப்படும். இந்தப் பாகை ஆறவிடாமல் நன்ருய்க் காய்ச்சிப் பிறகு ஆற வைத்துக் கழிகளால் தட்டி உடைத்தால் பழுப்புச் சர்க்கரை ஆகும்.

கொதிக்கும் தண்ணீரில் பழுப்புச் சர்க்கரையைக் கரைத்து, கம்பளிகளில் ஊற்றிப் பலமுறை வடி கட்டு வார்கள். பிறகு மிருகங்களின் எலும்பைச் சுட்டெரித்த கரிகளின்மேல் ஊற்றி வடிகட்டுவார்கள். அசுத்த மெல்லாம் கரியில் ஒட்டிக்கொள்ளும். சர்க்கரைக் கரைசல் சுத்தமாகிவிடும். அந்தக் கரைசலே மறுபடி யும் ஈயம் பூசிய பாத்திரத்தில் ஊற்றிக் காய்ச்சுவார் கள். நன்ருய்க் காய்ச்சி ஆறவைத்தால் இது வெள் ளைச் சர்க்கரை ஆகும். வெள்ளைச் சர்க்கரையிலிருந்து கற்கண்டு செய்யப்படுகிறது.

நம் இந்தியாவில் தென்னே, பனே, ஈந்து முத லியவற்றின் சாறுகளிலிருந்தும் வெல்லம், சர்க்கரை, கற்கண்டு முதலியவை செய்கிருர்கள். நம் சென்னே ராஜ்யத்தில் புகளூர், பாண்டியராஜபுரம், நெல்லிக் குப் பம் முதலிய இடங்களிலும், ஆந்திர ராஜ்யத்தில் அஷ்ட கிராமம், பீமன் பட்டணம், அஸ்கா, ராஜமகேந்

திரம் முதலிய இடங்களிலும் சர்க்கரை செய்கிருர்கள். நமது ராஜ்யம் முழுவதிலும் வெல்லம் செய்கிருர்கள். பனைவெல்லமும், பனங்கற்கண்டும் திருநெல்வேலி ஜில்லாவில் மிகுதியாகச் செய்கின்றனர்.

இனி பீட் கிழங்கிலிருந்து எப்படிச் சர்க்கரை செய்கிருர்கள் என்று தெரிந்துகொள்வோம். இந்தக் கிழங்கின் விதைகள் மண்ணில் விதைக்கப்பட்டுப் பயிர் செய்யப்படுகின்றன. கிழங்குகள் முற்றியபின் அவைகளைத் தோண்டி எடுத்து, இலேசான சிறு துண்டுகளாகச் சீவி, அவற்றை வெந்நீரில் போட்டு ஊற வைப்பார்கள். நன்ருய் ஊறிக் கருப்பஞ் சாறுபோல் அந்தச் சாறுஆனபின், கிழங்குத் துண்டுகளைப் பிழிந்தெடுத்துவிட்டு சாற்றை அடுப்பில் ஏற்றிக் காய்ச்சி முன் கூறிய முறைப்படியே சர்க்கரை செய்வார்கள்.

சர்க்கரை மரத்தில் பல இடங்களில் வெட்டி அதனின்று வடியும் பாலைச் சேகரித்து, முன் கூறிய விதமாகவே அடுப்பில் ஏற்றிக் காய்ச்சிச் சர்க்கரை செய்வார்கள். இம்மரங்கள் வட அமெரிக்காவிலும், இங்கிலாந்திலும் வளர்கின்றன.

சர்க்கரை நம் உடம்புக்கு வெப்பமும் வேலை செய்யும் சக்தியும் தரக்கூடியது. முக்கியமாக அது குழந்தைகளின் உடல் வளர்ச்சிக்கு இன்றியமையாதது. சர்க்கரை சேர்ந்த பண்டங்கள் பலநாள் வரை கெடாமல் இருக்கும். இதற்காகவே மேல் நாட்டார் சர்க்கரை சேர்த்தே ஊறுகாய்கள் செய்கிருர்கள். நம் தேசத்தில் ஊறுகாய்களுக்கு முக்கியமாய் உப்புச் சேர்க்கிருர்கள். சிலர் சிறிது சர்க்கரை சேர்ப்பதும் உண்டு. சர்க்கரை பலவிதமான பலகாரங்கள் செய்ய உபயோகப்படுகிறது. லேகியம் முதலிய மருந்துகளுக்கும் சர்க்கரை சேர்க்கப்படும்.

| | | | |
|---|---|---|---|
| பீட் | நசுக்கி | உருளைகள் | நாமக்கரும்பு |
| சாறு | குழைவு | கணுக்கள் | வெண்கரும்பு |
| பாகு | லேகியம் | கொப்பரை | பாண்டம் |
| ஈந்து | கற்கண்டு | பிழிவார்கள் | கரைசல் |
| ஆலை | நுரையாக | செங்கரும்பு | சேகரித்து |

அருஞ்சொற்பொருள்

ஆலை - தொழிற்சாலை, இயந்திரம். பாண்டம் - பானை. மிகுதியாக - தாராளமாக. கொப்பரை - பெரிய பாத்திரம்.

கேள்விகள்

1. சர்க்கரை எவ்வாறு நமக்குப் பயன்படுகிறது ?
2. கரும்பு எப்படிப் பயிர் செய்யப்படுகிறது ?
3. கரும்பிலிருந்து வெல்லமும் சர்க்கரையும் எவ்வாறு தயாரிக்கிறார்கள் ?
4. நமது ராஜ்யத்தில் எங்கே சர்க்கரை தயாரிக்கிறார்கள் ? ஆந்திர ராஜ்யத்தில் எங்கே தயாரிக்கப்படுகிறது ?
5. பீட் கிழங்கிலிருந்து எப்படிச் சர்க்கரை செய்கிறார்கள் ?
6. திருநெல்வேலி ஜில்லாவில் வெல்லமும் பனங்கற்கண்டும் எதிலிருந்து தயாரிக்கப்படுகின்றன ?

பயிற்சி

(1) உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது :—
பிழி; இனிமை; ஆலை; நறுக்கு.

(2) வாக்கியங்களிலுள்ள பிழைகளைத் திருத்தி எழுது :—
1. சேகர் நாளைப் பள்ளிக்கூடம் வருகிறான்.
2. நான் நேற்று நன்றாக விளையாடுகிறேன்.
3. மாணவர் எல்லாரும் வந்தான்.
4. காட்டு விலங்குகள் அனைத்தும் கதறியது.
5. நீங்கள் ஏன் நோயுடன் வெளியில் வருகிறாய் ?

(3) மாதிரியில் காட்டியுள்ளபடி பின்வரும் வாக்கியங்களை மாற்றி எழுது:—

மாதிரி: கோபாலன் காவியத்தைப் படித்தான். = காவியம் கோபாலனால் படிக்கப்பட்டது.

1. அவன் மரத்தை வெட்டினான்.
2. சிறுவர்கள் உணவு புசிக்கிறார்கள்.
3. கமலா புத்தகத்தைக் கிழித்தாள்.

# 16. படப்பயிற்சி—II

பின் வரும் படங்களை வரிசையாகப் பார்த்து ஒரு தபால் கடிதத்தின் பயணத்தைப் பற்றி எழுது.



## 17. கடிகாரம்

கடிகாரம் என்பது தற்கால விஞ்ஞான முறையில் காலத்தைத் திட்டமாய் நிர்ணயிக்க அமைக்கப்பட்டுள்ள ஒரு கருவியாகும். இடங்களுக்கேற்றவாறும், காலங்களுக்கேற்றவாறும் வெவ்வேறு வகையில் கடிகாரங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. ஒரு நாளைக்கு இருபத்துநான்கு மணி என்ற கணக்கின்படி, தற்கால கடிகாரங்கள் நேரங் காட்டுகின்றன.

நம் முன்னோர், காலத்தையும் நேரத்தையும் கணித்த முறை வேறுவிதமாகவே யிருந்து வந்திருக்கிறது. நாழிகை, முகூர்த்தம், சாமம் என்று நேரத்தையும், வாரம், மாதம், வருடம், யுகம் என்று காலங்களையும் கணக்கிட்டு வந்திருக்கிறார்கள்.

நம் முன்னோர் ஒரு நாட் பொழுதை அறுபது நாழிகைகளாகப் பிரித்தனர். ஆகவே ஒரு மணி நேரமானது இரண்டரை நாழிகையாகும். அதாவது ஒரு நாழிகை 24 நிமிஷங்களாகும். முன் காலத்தில் பகலில் மனிதர் தம் நிழலைக் காலடியால் அளந்து அல்லது சூரியனிருக்கும் இடத்தைப் பார்த்து நாழிகைகளை உத்தேசமாகக் கணக்கிட்டனர். இதல்லாமல் பெரிய பாத்திரங்களின் அடியில்துவாரம்செய்து,அவைகளில் பொடி மணலை நிரப்பி, அம்மணல் எவ்வளவு இறங்கி யிருக்கிறது என்பதன்மூலம் நாழிகைகளையறிந்தனர்.

பகலில் சூரிய வெளிச்சத்தினால் ஏற்படும் நிழலைக்கொண்டும், இரவிலே சந்திர உதயத்தைக் கொண்டும், நட்சத்திரங்கள் இருக்கும் நிலையைக் கொண்டும் நேரத்தை அறிந்துகொண்டனர். அதுவுமன்றிச் சேவல்களும் நேரங்களைத் தவறாமல் தெரிவித்து வருகின்றன. நடு இரவில் ஒருதரம் சேவல்

கூவும். அதிகாலை மூன்று மணிக்கு அதாவது விடிய ஏழரை நாழிகை யிருக்கும்போது முதல் கோழியும், விடிய ஐந்து நாழிகை யிருக்கும்போது அதாவது காலை நான்கு மணிக்கு இரண்டாம் கோழியும் விடியற் காலம் ஐந்து மணிக்கு அதாவது விடிய இரண்டரை நாழிகை யிருக்கும்போது மூன்றும் கோழியும் கூவும்.

ஒரு கம்பியைக் கல்லின் மத்தியில் நட்டுவைத்து அதன் நிழலிலிருந்து நேரத்தை அறிந்தார்கள். அதன் பின்பு கடிகாரங்கள் உலகில் தோன்றின. தற்கால கடிகாரங்களில் மணி, அரைமணி, கால்மணி அடிக்கக்கூடிய கடிகாரங்களும், கையில்கட்டும் சிறு கடிகாரங்களும், தேவையான நேரத்தில் எச்சரிக்கை செய்யும் கடிகாரங்களும், பாட்டுப் பாடும் கடிகாரங் களும் உள. இவைகளின் விலைகள் அவைகளின் வேலைப்பாட்டிற்குத் தகுந்தபடி அமைந்திருக்கும். இவைகளின் மூலம் நேரத்தைப் பார்த்தறிவது மிகவும் எளிது.

ஒரு நாளை இருபத்து நான்கு பாகங்களாகப் பிரித்து ஒவ்வொரு பாகத்துக்கும் மணி என்று பெய ரிட்டார்கள். இவ்விருபத்து நான்கு மணி நேரத் தையும், பகல் பன்னிரண்டு மணிகளாகவும், இரவு பன்னிரண்டு மணிகளாகவும், பிரித்திருக்கிறார்கள். ஒவ்வொரு நிமிஷத்தையும் அறுபது விநாடி (செகண்டு)களாகவும் பிரித்துச் சுலபமாகப் பொழுதறி யும்படி ஏற்படுத்தி யிருக்கின்றனர்.

அடுத்த பக்கத்திலுள்ள முதல் படத்தைப் பாருங்கள். இது சுவரில் மாட்டக்கூடிய பெரிய கடி காரத்தின் படம். இதன் மேல் பாகத்தில் ஒரு வெண்மையான வட்டத் தகட்டில் 1 முதல் 12 வரை

உள்ள எண்கள் குறிக்கப்பட்டுள்ளன. இத் தகட்டின் மத்தியில் சிறிதும் பெரிதுமாக இருமுட்கள் காணப் படுகின்றன. இம் முட்கள் அந்த எண்களைச் சுற்றிக் கொண்டே தகட்டில் சுற்றி வருவதிலிருந்து, மணி எத்தனை என்று தெரிந்து கொள்ளலாம்.

கடிகாரத்தின் கீழ்ப் பாகத்தில் ஒரு வட்டமான கனத்த பித்தளைத் தகடு ஆடிக்கொண்டே யிருக்கிற தல்லவா? அதுதான் ஊசல் என்று சொல்லப்படுவது.








இவ்வாறு இது ஆடுவதால்தான் மேல் பாகத்தில் உள்ள முட்கள் ஒரே நிதானமாக இயந்திர மூலமாய் நகர்ந்து சுற்றிச் சுற்றி வருகின்றன. இக்கடிகாரத் தின் தலைப்பில் 12 என்ற எண் இருக்கிறது. அதன் வலது பக்கத்திலிருந்து 1 முதல் 11 வரை உள்ள எண்கள் வட்டமாக இருக்கின்றன. தகட்டில் இருக் கும் ஓர் எண்ணுக்கும் மற்றோர் எண்ணுக்கும் நடுவே சிறிய இடம் இருக்கிறது. அந்த இடம் ஐந்து பாகங் களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. இப்படியே 12 மணி

களுக்கும் இடையில் 5 பாகங்கள் வீதம் மொத்தம் 60 பாகங்கள் இருக்கின்றன. இவைதான் நிமிஷங்கள்.

இப்பொழுது கடிகாரத்தைக் கவனியுங்கள். பெரிய முள் விரைவாகவும், சிறிய முள் மெல்லவும், நகருவதைக் காணலாம். பெரிய முள் 12 என்ற எண்ணிலிருந்து நகர்ந்து சென்று திரும்ப 12-க்கு வந்து சேரும்போது, சிறியமுள் ஒரு எண்ணிலிருந்து அடுத்த எண்ணுக்கு வந்திருக்கும். இதுதான் ஒரு மணி நேரம். இவ்வாறு பெரிய முள் ஒரு தடவை சுற்றும். இந்தக் காலம் பன்னிரண்டு மணி நேரம். சிறிய முள் இரண்டு தடவை சுற்றிவந்தால் 24 மணி நேரம் அல்லது ஒரு நாள் ஆகும்.

பெரிய முள், ஒரு எண்ணிலிருந்து மற்றொன்றுக்கு வர 5 நிமிஷங்கள் ஆகின்றன. பெரிய முள் 12 என்ற எண்ணிலிருந்து 3 என்ற எண்ணுக்கு வந்தால் 15 நிமிஷங்களாகும். இது 'கால் மணி' எனப்படும். 6 என்ற எண்ணுக்கு வந்தால் 30 நிமிஷங்கள் ஆகும். இது 'அரை மணி'. 9 என்ற எண்ணுக்கு வந்தால் 45 நிமிஷங்கள் அல்லது 'முக்கால் மணி' ஆகும். பிள்ளைகளே! இந்தக் கணக்குப்படி கடிகாரத்தைப் பார்த்து இப்போது மணி என்னவென்று சொல்லுங்கள்.

சுவரில் மாட்டக்கூடிய இந்தப் பெரிய கடிகாரத்தைத் தவிர, சட்டைப்பையில் போட்டுக் கொள்ளவும், கை மணிக்கட்டில் கட்டிக் கொள்ளவும் ஏற்ற சிறு கடிகாரங்கள் உள்ளன. அவைகளைப் படத்தில் பாருங்கள். இம்மாதிரியான சிறு கடிகாரத்தில் 6 என்ற எண் உள்ள இடத்தில் ஒரு சிறு வட்டம் இருக்கிறது. அதில் 10, 20, 30, 40, 50, 60, என்ற எண்கள் குறிக்கப்பட்டிருக்கின்றன. ஒரு சிறிய முள் வெகு

வேகமாக ஓடிக்கொண்டிருக்கிறது. இச்சிறு வட்டத்தி லுள்ள ஒவ்வொரு கோடும் ஒரு செகண்டு அல்லது விநாடியைக் குறிக்கும். இதிலுள்ள சிறிய முள் ஒரு தடவை சுற்றிவந்தால் 60 செகண்டுகள் அல்லது ஒரு நிமிஷமாகும். அப்போது பெரிய முள் ஒரு நிமி ஷத்தைக் காட்டும். இவ்வாறு பலவித கடிகாரங் களால், நாம் வெகு சுலபமாக நேரத்தை அறிந்து கொள்கிறோம். கடிகாரம் நமக்கு மிகவும் உபயோக முள்ளது.

| | | | |
|---|---|---|---|
| தகடு | விநாடி | கணிப்பது | முகூர்த்தம் |
| யுகம் | உதயம் | செகண்டு | மணிக்கட்டு |
| பொடி | நாழிகை | திட்டமாய் | வேலைப்பாடு |
| சாமம் | கடிகாரம் | விஞ்ஞான | உத்தேசமாய் |
| கருவி | பித்தளை | நிர்ணயிக்க | மாட்டக்கூடிய |

### அருஞ்சொற்பொருள்

கணிப்பது - கணக்கிடுவது. வேலைப்பாடு - திறமை மிக்க வேலை. திட்டமாய் - சரியாக. உத்தேசமாய் - சுமாராக. மாட்டக் கூடிய - தொங்கவிடக்கூடிய.

### கேள்விகள்

1. பண்டைக் காலத்தில் எவ்வழிகளில் நேரங் கண்டுபிடித் தார்கள்?
2. நாழிகைக்கும் மணிக்கும் உள்ள சம்பந்தம் என்ன?
3. கடிகாரத்திலுள்ள பெரிய முள்ளும் சிறிய முள்ளும் எவ்வாறு நகரும்?

### பயிற்சி

(1) பின்வரும் வார்த்தைகளை உன் சொந்த வாக்கியங்களில் அமை:—

சிருஷ்டி, சாமம், நகர், கணி, சுலபம்.

(2) பின்வரும் சொற்களைப் பிரித்து எழுது:—

| | | |
|---|---|---|
| இளங்காற்று | = | இளமை+காற்று. |
| பசும்பொன் | = | |
| அங்குமிங்கும் | = | |
| மூலமந்திரம் | = | |
| காலக்கிரமம் | = | |

III பின்வரும் வாக்கியங்களைச் சேர்த்து எழுது:—

மாதிரி: கந்தன் விளையாடினான். பின்பு கந்தன் வீட்டுக்குப் போனான். = கந்தன் விளையாடியபின் வீட்டுக்குப் போனான்.

1. செல்லம் தூங்கி யெழுந்தான். பிறகு அவன் விளையாடச் சென்றான்.

2. முயல் சிங்கத்தைப் பார்த்தது. பிறகு அது ஒரு புதரில் பதுங்கிக்கொண்டது.

3. காற்று வீசியது. காற்று மரங்களைச் சாய்த்தது.

## 18. கடிகாரம் வேண்டுமோ?

சேவற் கோழியுண்டு காகமுண்டு—வானம்
செக்கச் சிவந்து தெரிவதுண்டு
மேவு பொன்னே! அதிகாலை தெரிந்திட
வேறும் கடிகாரம் வேண்டுமோடி? 1

செங்கதிர் பொங்கி வருவதுண்டு—நல்ல
செந்தா மரைகள் மலர்வதுண்டு
மங்கையே! காலைப் பொழுதை யுணர்ந்திட
மற்றும் கடிகாரம் வேண்டுமோடி? 2

தன்னிழல் தன்னடி யாவதுண்டு—சுடர்
தானும் தலைநேர் எழுவதுண்டு
இன்னமுதே! பகல் உச்சியி தென்றிட
ஏதும் கடிகாரம் வேண்டுமோடி? 3

விண்மணி யாழியில் வீழ்வதுண்டு—வாசம்
வீசு மந்தாரை மலர்வதுண்டு
கண்மணியே! மாலைக் காலம் குறித்திடக்
கையில் கடிகாரம் வேண்டுமோடி? 4

முல்லை யரும்பு விரிவதுண் டாம்பலின்
மொட்டுகள் மெள்ள அவிழ்வதுண்டு
மெல்லியலே! மாலை வேளை யறிந்திட
வெள்ளிக் கடிகாரம் வேண்டுமோடி? 5

அம்புலி நட்சத் திரங்களுண்டு—கணக்
காக்கி யறிய வழிகளுண்டு
இன்பமே! நேரம் இரவி லறிந்திட
இன்னும் கடிகாரம் வேண்டுமோடி? 6

கம்மென வாசம் கமழ்பாரி சாதமிக்
காவில் மலர்ந்து சொரிவதுண்டு
அம்மையே! நள்ளிர வீதென்று சொல்லிட
ஆர்க்கும் கடிகாரம் வேண்டுமோடி? 7

காலைமாலை எந்த வேளையும்—சூரிய
காந்தி மலர்தானே காட்டிடாதோ
வேலை யெழுந்த திருவே! உனக்கினி
மேலும் கடிகாரம் வேண்டுமோடி? 8

சுற்றுப் பொருளெல்லாம் உற்றுநோக்கி—அவை
சுட்டும் மணிநேரம் கண்டறிவாய்
பெற்றமுத்தே! இந்த உண்மை யறிவோர்க்குப்
பின்னும் கடிகாரம் வேண்டுமோடி? 9

—தேசிக விநாயகம் பிள்ளை

அருஞ்சொற்பொருள்

பொன்னே - பொன் போன்ற பெண்ணே. செங்கதிர் - சூரியன். சுடர் - சூரியன். விண்மணி - சூரியன். ஆழி - கடல். அவிழ்வது - மலர்வது. மெல்லியல் - பெண். அம்புலி - சந்திரன். வேலை எழுந்த திரு - கடலில் பிறந்த இலக்குமி போன்ற பெண்.

கேள்விகள்

1. காலை, நடுப்பகல், மாலை ஆகிய நேரங்களை எந்த நிகழ்ச்சிகளிலிருந்து அறியலாம்?
2. இரவில் எப்படி நேரம் அறியலாம்?
3. மாலையிலும் நள்ளிரவிலும் மலரும் பூக்கள் எவை?

# 19. வ. உ. சிதம்பரம் பிள்ளை

நம் பாரத நாடு சுதந்திரம் பெறுவதற்காகப் போரிட்ட வீரர்கள் பலராவர். மகாத்மா காந்தியடிகள் நம் விடுதலைப் போருக்குத் தலைமை தாங்குவதற்கு முன்பே, திலகர் பெருமான் 'சுதந்திரம் எனது பிறப்புரிமை' என்ற மந்திரத்தை நமக்கெல்லாம் அளித்தார். அடிமைகளாக உறங்கிக் கொண்டிருந்த இந்திய மக்களை அவர் தட்டி எழுப்பினர். அக்காலத்தில் நம் தமிழ் நாட்டிலும் சில வீரர்கள் தோன்றி நாட்டின் விடுதலை இயக்கத்தில் முழு மனத்துடன் சேர்ந்து கொண்டார்கள். அவர்களில் தலை சிறந்தவர் வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்களாவர். இவர் திலகருடைய நெருங்கிய நண்பர்களில் ஒருவர். திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள ஓட்டப்பிடாரம் என்ற கிராமமே சிதம்பரம் பிள்ளையவர்கள் பிறந்த ஊராகும். இவர் 1872-ம் ஆண்டில் உலகநாதம் பிள்ளைக்கும் பிரமாயி அம்மைக்கும் புதல்வராகப் பிறந்தார்.



இளமையில் சிதம்பரம் பிள்ளை நன்கு கல்விகற்ருர். சுதந்திர வாழ்வில் அவருக்கிருந்த ஆர்வம் அக்காலத்திலேயே வெளிப்பட்டது. மெட்ரிக்குலேஷன் படிப்பு முடிந்ததும், அரசாங்க உத்தியோகப்பதவியை அவர் விரும்பாமல், வழக்கறிஞர் தொழிலை மேற்கொண்டார். பொதுவாக இத்தொழிலைச் செய்வோர்

தம் கட்சிக்கு இசைந்தபடியெல்லாம் சாட்சிகளைத் தயாரித்துப் பேசச் சொல்வர். ஆனால் சிதம்பரம் பிள்ளை உண்மைக்காகவே வாதாடுவார். ஏழைகளிடம் அவருக்குக் கரைகடந்த அன்பிருந்தது. ஆகவே ஏழைகளிடம் பணம் பெறாமல் அவர்கள் கட்சியை எடுத்துரைப்பது அவர் வழக்கம். சில காலம் இத் தொழிலைத் தாம் பிறந்த ஊரில் செய்தபின், தூத்துக் குடிக்குச் சென்று அங்கே இத்தொழிலை நடத்தினார். இக்காலத்தில் எல்லாம் அவர் உயர்ந்த தமிழ் இலக்கிய நூல்களைப் படித்துத் தம் அறிவைப் பெருக்கிக் கொண்டார்.

இல்வாழ்க்கையில் இவருக்கு மகிழ்ச்சியும் துயரமும் கலந்தே ஏற்பட்டன. இவருக்கு வாய்த்த முதல் மனைவியான வள்ளியம்மையார் நற்குணங்கள் நிரம்பப் பெற்று, இவருடைய இல்வாழ்க்கையை மகிழ்ச்சி நிறையச் செய்தார். ஆனால் அந்த அம்மையார் வாலிபத்தில் மரணமடைந்தார். அதனால் சிதம்பரம் பிள்ளை மிகவும் துயருற்றார். சில காலம் கழிந்த பிறகு மீனாட்சியம்மையார் என்பவரை இரண்டாம் மனைவியாகத் திருமணம் செய்துகொண்டார்.

நம் நாட்டு விடுதலை இயக்கம் தொடங்கியதும் சிதம்பரம் பிள்ளை அதில் சேர்ந்து உழைக்க முன் வந்தார். தமிழ் நாட்டில் மக்களிடையே பிரசாரம் செய்தார். ஆங்கிலேயரின் ஆட்சியை வேரறுக்க, சுதேசி இயக்கமே முக்கியமான துணையாகும் என்று அப்பொழுது தலைவர்கள் சொற்பொழிவு செய்தார்கள். அயல்நாட்டுப் பொருள்களை வாங்காமல் நம் நாட்டுப் பொருள்களையே வாங்கி உபயோகிக்க வேண்டுமென்பது இந்த இயக்கத்தின் கருத்து. சிதம்பரம் பிள்ளை போன்ற தலைவர்களின் சொற்பொழிவுகளைக் கேட்ட நம் நாட்டு மக்கள் அயல்

நாட்டுத் துணிகளை எரித்தனர்; சுதேசி சாமான்களையே வாங்க உறுதிகொண்டனர். அப்பொழுது சிதம்பரம் பிள்ளையுடன் உழைத்த மற்ருெரு தமிழ் நாட்டுத் தலைவர் சுப்பிரமணிய சிவா என்பவராவர்.

நம் நாட்டிலிருந்து அயல் நாடுகளுக்குச் செல்லும் கப்பல்கள் எல்லாம் ஆங்கிலேய முதலாளிகளுக்கே சொந்தமாயிருந்தன. இதைக் கண்ட சிதம்பரம் பிள்ளையின் மனம் கொதித்தது. பண்டைக் காலத்தில் சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் கப்பல் படைகள் வைத்திருந்தார்கள்; தமிழ் நாட்டு வியாபாரிகள் கப்பல்களில் கடல் கடந்து சென்று சிங்களம், பர்மா, ஜாவா முதலிய நாடுகளுடன் வியாபாரம் செய்தார்கள். இத்தகைய பண்டைப் பெருமையையுடைய தமிழ் மக்கள் இப்பொழுது தமக்கென்று கப்பல்களே இல்லாதிருந்தனர்; இந்த நிலைமையை மாற்ற வேண்டுமென்று சிதம்பரம் பிள்ளை உறுதி பூண்டார். பல செல்வர்களிடம் இதைப்பற்றிப் பேசி, அவர்களுடைய உதவியும் பொருளும் பெற்று, "சுதேசி ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி," என்ற ஒரு கப்பல் கம்பெனியைத் தொடங்கினுர். ஒரு கப்பலை விலைக்கு வாங்கி, அதைத் தூத்துக்குடிக்கும் கொழும்புக்குமிடையே ஓட்டினுர். இதைப் பார்த்த ஆங்கிலக் கப்பல் முதலாளிகள் இவருடன் போட்டியிட்டார்கள். சுதேசி கப்பல் கம்பெனி சுமார் இரண்டு வருடகாலம் நடந்தது; பிறகு போட்டி காரணமாக அது நின்று விட்டது. ஆயினும் சிதம்பரம் பிள்ளைக்கு, "கப்பலோட்டிய தமிழன்," என்று பெயர் ஏற்பட்டது.

ஒரு தடவை அரசாங்கத்தாருடைய தடையை மீறி, சிதம்பரம் பிள்ளையும் இவருடைய நண்பர் சுப்பிரமணிய சிவாவும் ஒரு கூட்டத்தில் பேசினுர்கள். அத

ஞல் இருவரும் கைது செய்யப்பட்டார்கள். பிறகு அவர்கள் விசாரணை செய்யப்பட்டுப் பல ஆண்டு களுக்குக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது. சிறையில் சிதம்பரம் பிள்ளைக்குக் கல் உடைத்தல், செக்கு இழுத்தல் போன்ற கடுமையான வேலைகள் கொடுக்கப்பட்டன. எனினும் நம் நாடு விடுதலை பெற வேண்டும் என்னும் ஆர்வம் காரணமாக, இத் துன்பங்களை அவர் பொருட்படுத்தவில்லை.

சிறையில் அவர் அனுபவித்த இன்னல்கள் கார ணமாக, அவரது உடல் நலம் குன்றிவிட்டது. அவர் சிறையிலிருந்து வெளிவந்த பிறகு சென்னையில் பல ஆண்டுகள் வாழ்ந்துவந்தார்; அப்பொழுது சில தமிழ் நூல்களைப் பதிப்பித்து, தமிழ் இலக்கியத் தொண்டு செய்தார். காந்தியடிகள் தொடங்கிய அறப் போரில் ஈடுபட அவரது உடல்நலம் இடந் தரவில்லை. ஆனால் அவர் மனம் மட்டும் நம் நாடு விடுதலை பெறவேண்டு மென்று இடையருது சிந்தித்துக் கொண்டிருந்தது. 1936-ம் ஆண்டில் இப்பெருவீரர் மண்ணுலக வாழ்வை நீத்தார்.

சிதம்பரம்பிள்ளை எதற்காகத் தம்உடல்,பொருள், ஆவி மூன்றையும் தியாகம் செய்தாரோ, அந்த சுதந்திரத்தை இன்று நாம் அடைந்துள்ளோம். எனி னும் நம் மக்களின் வறுமைப் பிணி முற்றிலும் நீங்க வில்லை. பல துறைகளில் நாம் இன்னும் முன்னேற் றம் அடையவேண்டியவர்களாக இருக்கிறோம். சிதம் பரம் பிள்ளை போன்ற தியாகிகளைப் பின்பற்றி நாமும் நம் நாட்டு நலனுக்காக உழைக்க முன்வர வேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| இடையருது | கடுங்காவல் | வாய்த்த | பிணி |
| தலைமைதாங்கு | கைது செய் | பிரசாரம் | ஈடுபட |
| குன்றிவிட்டது | இன்னல் | மந்திரம் | வாதாடு |
| பண்டைப் பெருமை | இயக்கம் | நீத்தார் | |

### அருஞ்சொற்பொருள்

தலைமை தாங்கு - தலைவனாயிரு. வாதாடு - தருக்கம் செய். இன்னல் - துன்பம். நீத்தார் - துறந்தார். குன்றி விட்டது - குறைந்து விட்டது. ஆவி - உயிர். பண்டைப் பெருமை - பழங் காலப் பெருமை. இடையறாது - நீங்காது. பிணி - நோய்.

### கேள்விகள்

1. சிதம்பரம் பிள்ளையவர்களது பிறந்த ஊர் எது? பெற்றோர் யாவர்?
2. சிதம்பரம் பிள்ளை எவ்வாறு வழக்கறிஞர் தொழிலைச் செய்தார்?
3. சிதம்பரம் பிள்ளைக்குக் 'கப்பலோட்டிய தமிழன்' என்ற பெயர் எப்படிக் கிடைத்தது?
4. சிதம்பரம் பிள்ளை எப்பொழுது சிறைப் பட்டார்? சிறையில் அவர் அனுபவித்த துன்பங்கள் யாவை?

### பயிற்சி

I உன் சொந்த வாக்கியங்களில் பின்வரும் வார்த்தைகளை அமைத்து எழுது:—

தலைமை தாங்கு; வாதாடு; வாய்த்த; குன்றிவிட்டது; இடையறாது.

## குறிகள்

II நிறுத்தக்குறிகள்:

(,) இந்த அடையாளம் கால்புள்ளி எனப்படும். வாசிக்கும் போது இந்தக் குறி இருக்குமிடத்தில் ஒரு மாத்திரை நேரம் நிறுத்தவேண்டும்.

உதாரணம்:—பால், சோறு, எலி முதலியவற்றைப் பூனை தின்னும்.

(.) இது முற்றுப்புள்ளி எனப்படும். ஒவ்வொரு வாக்கியத்தின் முடிவிலும் இது காணப்படும். வாசிக்கும்போது இந்தக் குறியிட்ட இடத்தில் நான்கு மாத்திரை நேரம் நிறுத்தவேண்டும்.

உதாரணம்:—பறவைகள் வானத்தில் பறக்கின்றன. தவளைகள் தண்ணீரில் நீந்துகின்றன.

(" ") இக்குறி, மேற்கோள்குறி எனப்படும். ஒருவர் எந்த வாக்கியங்களை எந்த விதமாய்க் கூறினாரோ, அந்த வாக்கியங்கள் அப்படியே உபயோகிக்கப்பட்டுள்ளன என்பதைக் குறிக்கும் இடங்களில், முதலிலும் முடிவிலும் இவ்வடையாளங்கள் உபயோகிக்கப்படும்.

உதாரணம்:—வனதேவதை அவன் முன் தோன்றி, "நீ இன்பமாய் வாழ்வாயாக," என்று கூறியது.

(' ') இக்குறியும் மேற்கோள் குறிதான். ஆனால் இது பழமொழியையும், பிற மொழி வார்த்தைகளையும் குறிக்கிற இடங்களில், அவைகளின் முதலிலும் முடிவிலும் உபயோகிக்கப்படும்.

உதாரணம்:— 'போதும் என்ற மனமே பொன் செய்யும் மருந்து' என்று பெரியோர் கூறியிருக்கின்றனர்.

நாம் உணவில் சேர்க்கின்ற உப்பு, 'சோடியம் குளோரைடு' எனப்படும்.

III பின்வரும் வாக்கியத்தில் தகுந்த நிறுத்தக் குறிகளை அமைத்து எழுதவும்:—

சிதம்பரம் பிள்ளை சுப்பிரமணிய சிவா பாரதியார் முதலியோர் தமிழ் நாட்டில் மக்களிடையே சுதந்திர ஆர்வத்தைத் தூண்டினர் அவர்கள் நம் நாட்டு விடுதலைக்காகப் பெரிதும் பாடுபட்டனர்

## 20. இராமகிருஷ்ண பரமஹம்ஸர்

கங்கை நதி பாய்வதால் வளம்பெற்ற **வங்காளத்தில் ஹூக்ளி** ஜில்லாவில் **காமர்ப்புகூர்** என்றொரு கிராமம் உண்டு. இது **கல்கத்தா** நகரத்திற்கு மேற்கே சுமார் எண்பது மைல் தூரத்தில் உள்ளது. ஏறக்குறைய நூறு வருடங்களுக்கு முன் இவ்வூரில் **க்ஷுதிராம சட்டோபாத்தியாயர்** என்ற வேதியர் வாழ்ந்திருந்தார். இவர் மிகவும் ஏழையாயிருந்தபோதிலும் குணசீலராய் இருந்தார். இவருக்குச் **சந்திரமணி தேவி** என்ற பெண்மணி மனைவியாய் வாய்த்திருந்தாள். இல்லறத்தை நல்லறமாக்கிய இவர்கட்கு இரு குமாரர்களும், ஒரு குமாரியும் இருந்தனர். பின்னர் **கயா** க்ஷேத்திரத்துக்கு யாத்திரை சென்றிருந்த காலத்தில் அங்குக் கோவில் கொண்டிருக்கும் கதாதரர் அருள் பெற்று, ஓர் ஆண்மகவைப் பெற்றனர். 1836-ம் ஆண்டிலே பிறந்த இத் தெய்வக் குழந்தைக்கு **கதாதரன்** எனப் பெயரிட்டனர்.

கதாதரர் குழந்தைப் பருவத்திலேயே, தமது அழகாலும் விளையாட்டுக்களாலும் எவரையும் வசீகரித்தார். களிமண்ணால் தெய்வச்சிலைகள் செய்வதிலும் சித்திரம் வரைவதிலும் பக்தி ரசக் கீர்த்தனைகள் பாடுவதிலும், வல்லவராயிருந்தார். இவரது ஏழாம் வயதில் க்ஷுதிராமர் மரணமடைந்தார். அதன் பின் கதாதரர் தம் தாயின் மனம் கோணாமல் நடந்து வந்தார். அவ்வூர்த் தருமசாலையில் வந்து தங்கும் பெரியோர்களது உபதேசங்களைக் கேட்டுவந்தார்.



புராண இதிகாசங்களில் கேட்டறிந்த விஷயங்களை, ஆடல் பாடல்களோடு அபிநயத்துக் காட்டி, தம்மையொத்த சிறுவர்களுக்கு இன்பமூட்டிவந்தார். பள்ளிக்கூடப் படிப்பிலே இவருக்குச் சிறிதும் சிரத்தை இல்லாமையால் அதனைக் கைவிட்டார். இவரது மூத்த சகோதரர் ராமகுமாரர் கல்கத்தாவிலே சம்ஸ்கிருத பண்டிதராய் இருந்தார். அவர் கதாதரர் பதினேழு வயது ஆகியும், கல்விப் பயிற்சியும் உலக அனுபவமும் பெருதது கண்டு மனம் வருந்தி, இவரையும் தம்மோடு கல்கத்தாவுக்கு அழைத்துச் சென்றார். அங்குச்சென்றதும் தட்சிணேசுவரம் என்ற புண்ணிய ஸ்தலத்தில் இருந்த ஆலயம் ஒன்றில் பூஜை செய்யும் திருப்பணி ராமகுமாரருக்குக் கிடைத்தது.

தம் தமையனுடன் கூடவே அக்கோவிலுக்கு அடிக்கடி சென்ற கதாதரர் பக்திப் பரவசராய் அந்த ரங்க பூஜை செய்துவந்தார். சில நாட்களில் கதா

தரரே அத் திருப்பணியை ஏற்றுக்கொண்டார். தேவி மந்திரம் உபதேசம் பெற்றுக்கொண்டு பூஜைசெய்யத் தொடங்கிய கதாதரர், அத்தேவியை நேரில் தரிசிக்க ஆவல்கொண்டார். இவர் தம்மை மறந்து பூஜை செய்யும் சமயங்களிலே பல அதிசயச் செயல் செய்வார். இக்காலத்திலேயே இவருக்கு உலக வாழ்க்கையில் பற்றுக் குறைந்தது. உள்ளம் உருகிக் கண்ணீர் வடியத் தேவியின் தோத்திரங்களை இசையோடுபாடி ஆனந்தங் கொள்வார். இச்சமயத்திலே இவருடைய மூத்த தமையனார் இறந்தார். அப்போதும் இவர் மனம் குடும்பப் பொறுப்பில் செல்லவில்லை. தேவி பிரத்யட்சமாகவில்லையே என்ற கவலையே கொண்டிருந்தார். முடிவில் ஒரு நாள் தேவியை நேரில் தரிசித்தார்.

இதன் பின் இவர் தேவியைப் பூஜைசெய்யும் முறைகள் மாறின. அவை பார்ப்பவர்க்குப் பைத்தியம் பிடித்தவர் செயல்களாகவே தோன்றின. இதுகண்ட கோவிற் காவலர், தாம்கண்ட விபரீதக் காட்சிகளைக் கோவில் அதிகாரியான மதுரநாதரிடம் அறிவித்தனர். மதுரநாதரும் தாமே நேரில் வந்து மறைந்து நின்று பார்த்துப் பல சோதனைகள் செய்தார். இதன் பயனாக கதாதரருடைய உண்மையான பக்தியின் பெருமையை உணர்ந்துகொண்டார். கதாதரர் விருப்பம் போல் பூஜைகள் செய்யலாம் என்று அவர் உத்தரவிட்டார்.

கதாதரர் அந்நிலையில் இருப்பதை நன்கு அறியாத இவருடைய தாயும் இரண்டாம் தமையனும் இவருக்கு விவாகம் செய்துவைக்க முயன்றனர். அவ்வாறே ஜெயராமபட்டியில் வாழ்ந்த ராமசந்திரமுகர்ஜியின் குமாரி சாரதாதேவியை மணம் செய்வித்தனர்.

மணம் நிறைவேறியதும் கதாதரர், சாரதா தேவி யைப் பிறந்த வீட்டிலேயே விட்டு, தட்சிணேசுவர ஆலயத்தில் முன்போல் பூஜை செய்து வந்தார். குடும்பப் பொறுப்பை மேற்கொள்ளாமல், தம்மை மறந்து நிஷ்டையிலும் தியானத்திலும் பொழுது போக்கினுர். ஆறு வருடங்கள் தூங்காமல் தவம் புரிந் தார். அக் கடும் தவத்தின் பயனுகப் பொன்னேயும் மண்ணேயும் ஒன்றுபோல் கருதும் வைராக்கியம் அடைந்தார். அறியாமையால் எவரேனும் தமக்கு இழைக்கும் தீங்கைப் பொறுக்கும் தன்மையைப் பெற்ருர்.

இக் காலத்திலே பைரவிப் பிராம்மணி என்ற அம்மையார் தமக்குத் தக்க சீடர் ஒருவரைத் தேடி வந்து கதாதரரைக் கண்டார். கதாதரரும் தாம் அறிந்துஅனுபவித்த உயர்ந்த உண்மைகளேப்பற்றிப் பெரியோர்களிடம் அளவளாவி உண்மையை அறிய விரும்பினுர். அப்போது இவருக்குக் கதாதரர் என்ற பெயர் மாறி, **இராமகிருஷ்ணர்** என்ற பெயர் வாய்த் தது. பைரவிப் பிராம்மணியாரும் இராமகிருஷ்ணரது தவத்தின் மகிமையை உணர்ந்து, பல சாஸ்திரவாதி களுக்கும் இவர் பெருமையை நன்கு விளக்கினுர். தேச சஞ்சாரம் செய்துவந்த மகான்கள் பலர், தட்சி ணேசுவர ஆலயத்துக்கு வந்து இராமகிருஷ்ணரைத் தரிசித்துச் சென்றனர். இவ்வாறு சென்றவர்கள் இவரது பெருமையை உலகம் அறியச் செய்தனர். வேதாந்த விஷயங்களேப் பற்றிய நுட்பமான சந்தே கங்களே இனிய சொற்களால் விளக்கும் சக்தி இராம கிருஷ்ணருக்கு ஏற்பட்டது.

இந்நாளில் **நருமதை** நதிக்கரையில் நாற்பது வருடம் கடுந்தவம் புரிந்து பயன்பெற்ற **தோதாபுரி** என்ற பெரியார் தட்சிணேசுவரத்துக்கு வந்தார்.

# 21. படப்பயிற்சி—III

பின்வரும் படங்களில், ஒவ்வொன்றும் ஒரு பழமொழியைக் குறிக்கிறது. படத்திற்குரிய பழமொழியைக் கண்டுபிடி.












## 22. கிராமத் தொண்டு

ஒரு கிராமத்திற்குத் தொண்டு அல்லது ஊழியம் செய்வது எளிதான காரியமல்ல. ஒருவன் முதன் முதலில் தன்னைப் பெற்ற தாய் தந்தையர்க்கும், பிறகு உடன் பிறந்தார், சுற்றத்தார், ஏழை எளியவர்கள், கஷ்டப்படுகிறவர்கள் முதலியவர்களுக்கும் உதவிபுரியக் கடமைப்பட்டவன். ஒருவன் ஒரு கிராமத்துக்குத் தொண்டு செய்தால், அவன் அநேக ஏழைக்குடும்பங்களுக்கும் தொண்டு செய்தவனாவான்.

ஒரு கிராமத்திற்குத் தொண்டு செய்வதற்காக வீடு வீடாய்ச் சென்று ஒவ்வொருவருக்கும் உதவி செய்வதும் முடியாத காரியம். ஆனால் அந்தக் கிராமத்தவர்களுக்கான, பொதுவான சில தொண்டுகள் செய்வதுதான் சிறந்ததாகும். ஒரு கிராமத்திற்குப் பொதுவாகச் செய்யவேண்டிய தொண்டுகள் பல உள. அவைகளைக் கல்வி, சுகாதாரம், செல்வநிலை என மூன்று பாகங்களாகப் பிரிக்கலாம்.

கல்வியே எவ்விதமான சீர்திருத்தத்திற்கும் ஆதி காரணமாயிருந்து பலனளிக்கக்கூடியது. ஒரு கிராமத்தில் குறைந்தது ஒரு பள்ளிக்கூடமும், அதை உண்மையான நோக்கத்துடனும், தளராத ஊக்கத்துடனும் விருத்தி செய்யும் சில ஆசிரியர்களும் தேவை. இலக்கியக் கல்வியுடன் பிள்ளைகளுக்குச் சிறு குடிசைத்தொழிற் கல்வியும் கற்பிக்கப்பட வேண்டும். தேக ஆரோக்கியத்திற்கான பலவித விளையாட்டுக்களும் ஏற்படுத்த வேண்டும்; பல பாட்டுக்களையும் கற்பிக்கவேண்டும். இவ்வாறு செய்தால்தான் பிள்ளைகளுக்குக் கல்வி கற்றுக்கொள்ள ஊக்கமும் உற்சாகமும் ஏற்படும்.

ஒழிவு நேரங்களில் வயது வந்தவர்கள் கல்வி கற்றுக்கொள்ள இரவுப் பள்ளிக்கூடங்களும் நடத்த

வேண்டும். படித்து வெளியேறுபவர்கள் தங்கள் கல்வியறிவை விருத்தி செய்துகொள்ளவும், விவசாய அறிவை அதிகப்படுத்திக் கொள்ளவும், உலகப் போக்கை அறிந்துகொள்ளவும் இலவச வாசகசாலை கள் அமைக்கவேண்டும். அவைகளில் விவசாயம், கைத்தொழில் முதலியவைகளை விளக்கும் புத்தகங் களும், பத்திரிகைகளும் வழங்கப்படவேண்டும். இவை களை வாங்குவதற்காக, நன்கொடை, சந்தா முதலிய வை வசூல் செய்யவேண்டும். கல்வியே மனிதர்க்குக் கண் என்பதை மறக்கக்கூடாது.

கல்விக்கு அடுத்தது சுகாதாரமேயாகும். 'சுவரை வைத்துத்தான் சித்திரம் எழுதவேண்டும்' என்னும் பழமொழிக்கிணங்க ஒருவன் தேக சுகத்துடன் இருந் தால்தான், அவன் எக்காரியமும் செய்யமுடியும். சுக மாய் ஒருவன் வாழவேண்டுமானல் அவன் சுத்தமா யிருக்கவேண்டும். பிறரையும் சுத்தமாயிருக்கச்செய்ய வேண்டும். வீடுகளும் வீடுகளின் சுற்றுப்புறங்களும் தெருக்களும் பொதுவில் கிராம முழுவதும் சுத்தமாயி ருக்கும்படி செய்யவேண்டும். சுகாதார விஷயங்களைப் பற்றி ஜனங்களுக்கு விவரமாக எடுத்துச் சொல்ல வேண்டும். தெருவைப் பெருக்குதல், தெருக்களைச் சீர்திருத்தம் செய்தல் முதலிய வேலைகளை நடத்திக் காட்டவேண்டும். கிராமத்திலுள்ள மற்ற வாலிபர்களை யும் இவ்வேலைகளில் உற்சாகத்துடன் ஈடுபடச் செய் தல்வேண்டும். கிராமத்திலுள்ள குப்பை கூளங்களைத் தனியாக ஒரு புறத்தில் கொட்ட ஏற்பாடு செய்ய வேண்டும். குளம், கிணறு முதலியவைகளை ஜனங் கள் அசுத்தம் செய்யாமல் பாதுகாக்கவேண்டும். இராக்காலங்களில் தெருக்களில் விளக்குகள் போட வேண்டும். மிருகங்களுக்குத் தனி இடவசதி ஏற்பாடு

செய்யவேண்டும். தொற்று வியாதிகளைப் பற்றி ஜனங்களுக்கு எடுத்துச்சொல்ல, சுகாதார அதிகாரிகள் மூலம் ஏற்பாடு செய்யவேண்டும். இவ்விதமாகக் கிராமச் சுகாதாரத்தை அபிவிருத்தி செய்யலாம்.

அடுத்தபடியாகக் கிராமத்தின் செல்வ நிலையைப் பலவிதத்திலும் உயர்த்தப் பாடுபடவேண்டும். விவசாயிகளுக்கும், வியாபாரிகளுக்கும் காலாகாலத்தில் குறைந்த வட்டிக்குப் பணம் கிடைக்கும்படி **ஐக்கிய நாணயச் சங்கங்கள்** ஏற்படுத்தலாம். இவற்றின் மூலமாக விவசாயிகள், தமக்குத் தேவையான உழவுச் சாமான்கள் முதலியவைகளை வாங்கலாம். விளை பொருள்களைச் சேர்த்துவைத்துக் கூட்டு விற்பனை செய்து நல்ல லாபம் பெறலாம். உள்ளூரில் விளையும் பொருள்களை ஒன்றுசேர்த்து அயலூரில் கொண்டு போய் விற்று லாபம் அடையலாம்.

இந்த விதமான முன்னேற்றத்திற்கான வேலைகளை ஒருவர் செய்வதே, கிராமத்திற்குச் செய்யும் பேருதவியாகும். நம் கிராமங்கள் முன்னேறினால்தான், நம் நாடு முன்னேறும். நம் நாடு முன்னேறினால்தான் நம் தேசமும் முன்னேற்றம் அடையும். நம் தேசம் முன்னேற்றம் அடைந்தால்தான், நாம் சுதந்திரத்தோடு சுகமாக வாழலாம். தன் கிராமத்திற்காக உழைப்பவனே தேசத்திற்காக உழைக்கும் உண்மைத் தொண்டனாவான்.

| | | | |
|---|---|---|---|
| பலன் | தொண்டு | அடுத்தது | பெருக்குதல் |
| வட்டி | இலக்கிய | சுற்றத்தார் | சீர்திருத்தம் |
| ஒழிவு | விவரமாக | அபிவிருத்தி | ஆரோக்கியம் |
| குடிசை | பேருதவி | விளைபொருள் | கூட்டு விற்பனை |
| தளராத | உள்ளூர் | நன்கொடை | உடன்பிறந்தார் |

### அருஞ்சொற்பொருள்

தளராத - சோர்ந்து போகாத. தொண்டு - ஊழியம். நன்கொடை - பரிசு, இனமாகக் கொடுத்தல்.

### கேள்விகள்

1. பள்ளிக்கூடப் பையன்கள் செய்யக்கூடிய கிராமத் தொண்டுகள் சிலவற்றை எடுத்துச் சொல்லி அவைகளை நீ செவ்வனே செய்ய என்ன ஏற்பாடுகள் செய்வாய் என்று எழுது.
2. கிராமத் தொண்டு எவ்வாறு தேசத் தொண்டாகிறது ?

### பயிற்சி

(1) வாக்கியங்களிலமை :—

தளராத, நன்கொடை, அபிவிருத்தி, சுற்றத்தார், பேருதவி.

(2) சொற்றொடர் :— சில சொற்கள் ஒழுங்குபடத் தொடர்ந்து நின்று ஒரு கருத்தை உணர்த்தினல் அச்சொற்கள் சொற்றொடர் ஆகும். சொற்களின் கருத்து முடிந்ததாயிருந்தால் அச்சொற்றொடரை வாக்கியம் என்கிறோம்.

வாக்கியத்தில் சாதாரணமாக எழுவாய் முதலில் வரும்; செயப்படுபொருள் இருந்தால் அது அடுத்தபடியாக வரும்; முடிவில் பயனிலை வரும்.

(உ-ம்) கந்தன் அரக்கரை வதைத்தான்.

இந்த முறை மாறியும் வாக்கியம் வரலாம்.

(உ-ம்) அரக்கரைக் கந்தன் வதைத்தான்.

அரக்கரை வதைத்தான் கந்தன்.

(3) எதிர்ச்சொற்கள் கூறு :—

பாடுவார்; நல்ல; முடியாத; ஆதி.



## 23. தாஜ்மஹால்

மதுரைக்குச் சென்றால் மீனாட்சியம்மன் கோவிலைப் பார்க்காமல் நாம் வரமாட்டோம். இதே போல் தஞ்சை, திருச்சி, ஸ்ரீரங்கம், காஞ்சீபுரம் முதலிய ஊர்களில் பெரிய பெரிய கோவில்கள் இருக்கின்றன. இவைகளை யெல்லாம் காணும்பொழுது, நம் நாட்டின் பண்டைக்காலப் பெருமை நினைவுக்கு வருகிறது. "இந்தக் கோவில்களை நிர்மாணித்த அரசர்களும் சிற்பிகளும் எவ்வளவு அரிய பெரிய வேலையைச் செய்திருக்கிறார்கள்! எத்தனை நூற்றாண்டுகளாக இவை அழியாமல் நின்று, அவர்களுடைய பெயர்களை நமக்கு நினைவுறுத்திக் கொண்டிருக்கின்றன!" என்று எண்ணுகிறோம். தென்னாட்டின் அழியாச் செல்வங்களாகக் கோவில்கள் விளங்குவதைப்போல், வட இந்தியாவிலும் பல கட்டடங்கள் நம் சரித்திரப் பெருமைக்குச் சான்றாக நிற்கின்றன. இவற்றில் தலைசிறந்தது ஆக்ராவிலுள்ள தாஜ்மஹால் ஆகும்.

தாஜ்மஹால் சுமார் முந்நூறு ஆண்டுகட்கு முன் கட்டப்பெற்றது. இதை நிர்மாணித்தவர் யார் என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கும். பதினேழாம் நூற்ருண்டின் மத்தியில் டில்லியைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்த ஷாஜஹான் என்ற மொகலாயப் பேரரசரே தாஜ்மஹாலைக் கட்டியவர். இவரது மனைவியான மும்தாஜ் மஹால் தம் கணவரின் அன்பை முழுதும் பெற்றிருந்தார். இவ்வம்மையாரின் புதல்வர்களில் ஒருவரே ஷாஜஹானுக்குப் பிறகு சக்கரவர்த்தியான ஔரங்கசீப் ஆவர். மும்தாஜ் மஹால் மரணமடைந்தபொழுது ஷாஜஹான் ஆருத்துயர் அடைந்தார். அவருடைய பெயரும் தம் பெயரும் உலகில் என்றும் நிலைத்து நிற்கத்தக்க ஒரு நினைவுச் சின்னத்தைக் கட்டிவைக்க அவர் நிச்சயித்தார். அதன் பயனுகத் தோன்றியதே தாஜ்மஹால்.

தாஜ்மஹால், ஆக்ரா நகருக்கருகே யமுனை நதிக்கரையில் அமைந்துள்ளது. இதன் அழகையும் அமைப்பையும் கண்டோர் யாரும் வியக்காமல் இரார். இது முழுதும் சலவைக் கல்லாலேயே அமையப் பெற்ற ஒரு பெரிய கட்டடம். இது ஒரு தோட்டத்தில் அமைந்துள்ளது. தாஜ்மஹாலின் முன்னே சுமார் 300 அடி நீளமும் அகலமும் கொண்ட ஓர் உயர்ந்த சலவைக்கல் மேடை போன்ற முற்றம் அமைந்திருக்கிறது. இந்த மேடையின் முன்புற மூலைகளில் இரு உயர்ந்த தூபிகள் இருக்கின்றன.

தாஜ்மஹாலில் முக்கியக் கட்டடம் எண்கோண வடிவமாகவும் இரண்டு அடுக்கு மாடிகளோடும் அமைந்திருக்கிறது. சுவர்களெல்லாம் பலவகையான இரத்தினக் கற்கள் பதிக்கப்பட்டு அழகு நிறைந்துள்ளன. இக்கட்டடத்தின் சிகரம் மிகப்பெரிய கோள

வடிவ விமானமாயிருக்கிறது. கட்டடத்தின் கீழ்அறையில் ஷாஜஹான், மும்தாஜ்மஹால் ஆகிய இருவரின் சடலங்களும் அடக்கம் செய்யப்பட்டுள்ளன.

தாஜ்மஹாலேக் கட்டி முடிக்க இருபது ஆண்டுகள் பிடித்தன என்றும் பதிஞயிரக் கணக்கான ஆட்கள் உழைத்து அதைக் கட்டினர்கள் என்றும் வரலாற்று நூலாசிரியர்கள் கூறுகிருர்கள்.

தாஜ்மஹாலே நிலவொளியில் பார்த்தால், அது பகலில் பார்ப்பதைவிட, பன்மடங்கு அழகாகத் தோன்றுகிறதென்று கூறுகின்றனர். உலகில் தாஜ்மஹாலேவிடப் பெரிய கட்டடங்கள் பண்டைக்காலத்திலும் தற்காலத்திலும் கட்டப்பட்டுள்ளன. ஆனல் தாஜ்மஹாலுக்கு இணையான அழகுள்ள கட்டடம் வேறெதுவும் இல்லையென்றே சொல்லலாம்.

| | | | |
|---|---|---|---|
| சிற்பி | சான்று | ஆருத்துயர் | நினைவுறுத்து |
| சடலம் | முற்றம் | வியக்காமல் | தலேசிறந்தது |

அருஞ்சொற்பொருள்

சிற்பி - கட்டடக் கலேயில் வல்லவன். நினைவுறுத்து - ஞாபகப்படுத்து. ஆருத்துயர் - குறையாத துயரம். முற்றம் - ஒரு கட்டடத்தின் முன்னே பின்னே திறந்த வெளியாக அமைக்கப்பட்ட பகுதி. சடலம் - உடல். சான்று - சாட்சி.

கேள்விகள்

1. நம் நாட்டுச் சரித்திரப் பெருமைக்கு இன்று சான்ருக உள்ளவை யாவை?
2. தாஜ்மஹாலே யார் எதற்காகக் கட்டினர்?
3. தாஜ்மஹாலேப் பற்றிப் பத்து வாக்கியங்கள் எழுது.

பயிற்சி

(1) உன் சொந்த வாக்கியங்களில் உபயோகி:—
நினைவுறுத்து; ஆருத்துயர்; சான்று.
(2) எதிரான பொருளுடைய சொற்களேக் கூறு:—
பார்க்காமல்; பெரிய; சிறந்தது; உழைத்து.

# 24. உண்மையின் பெருமை

## காட்சி 1

இடம்.—மதுரை நகரில் ஒரு வீடு.

காலம்:—மாலை வேளை.

பாத்திரங்கள்:—கோபாலன், அவனுடைய தாய்.

[கோபாலனுடைய தாய் படுக்கையில் சாகும் தருணத்தில் இருக்கிருள்.]

**தாய்:**—(தனக்குள்) ஐயோ ஈசா! இவ்வளவு கெட்டவனுக எனக்கு ஒரு பிள்ளை பிறக்க வேண்டுமா! நான் என்ன சொல்லியும் கேட்க மாட்டேன் என்கிருனே! கடைசியாகச் சொல்லிப் பார்க்கிறேன். (வெளிப்படையாய்) கோபாலா!

[கோபாலன் வருகிருன்.]

**கோபாலன்:**—அம்மா! ஏன் கூப்பிட்டாய்?

**தாய்:**—கோபாலா! நான் சீக்கிரம் இறந்துவிடுவேன்.

**கோபா:**—அம்மா! நீ சாக வேண்டாம்! அம்மா!

[அழுகிருன்.]

**தாய்:**—அப்பா! நான் ஏன் இன்னும் இந்தப் பூமியிலே இருக்கவேண்டும்? நீயோ திருடுதல், பொய் சொல்லுதல், சூதாடல் முதலிய பலகெட்ட காரியங்களையும் செய்கின்ருய். நான் எவ்வளவோ சொல்லியும் நீ அவைகளை விடமாட்டேன் என்கிருய். ஆகையால் நான் இறப்பதே நல்லது.

**கோபா:**—நான் என்ன செய்வேன் அம்மா! பிழைக்கும் வழி ஒன்றும் தெரியாமல் திருட ஆரம்பித்தேன். அதிலிருந்து இந்தப் பழக்கங்கள் எல்லாம் என்னைப் பிடித்துக்கொண்டன. என்ன செய்வேன்?

**தாய்:**—கோபாலா! அப்படியானல் நீ உன்னுடைய தீய தொழில்களை விடமாட்டாயா?

கோபா:—எப்படியம்மா ஒரேயடியாக விட்டுவிட முடியும்? ஒரு வழியும் தோன்றவில்லையே!

தாய்:—அப்பா! கடைசியாகக் கேட்கிறேன். இவைகளில் ஒன்றையாவது நீ விட்டுவிட முடியாதா?

கோபா:—(தனக்குள்) நம் தாய் கடைசியாகக் கேட்பதற்காக ஏதாவது ஒன்றை விட்டுவிடத்தான் வேண்டும். எதை விட்டுவிடலாம்?-திருடுவதை-ஐயையோ! அதை விடமுடியாது. பொய்சொல்லுவதை வேண்டுமானால் விட்டுவிடலாம். (வெளிப்படையாய்) அம்மா, நான் இன்றுமுதல் என் உயிர் உள்ளளவும் பொய் சொல்லமாட்டேன்.

தாய்:—கோபாலா! இனிமேல் நான் மகிழ்ச்சியுடன் உயிர் விடுவேன். நீ எப்பொழுதும் உண்மையையே பேசு; உனக்கு நல்ல காலம் பிறக்கும்.

## காட்சி 2

இடம்:—அரச மாளிகைக்கு அருகே ஒரு வீதி.
காலம்:—நள்ளிரவு.
பாத்திரங்கள்:—கோபாலன், பாண்டியன்.

[மதுரை அரசனுன பாண்டியன் பிச்சைக்கார வேஷத்தில் நகர சோதனை செய்து வருகிருன்.]

பாண்டியன்:—(தனக்குள்) அதோ! யாரோ ஒருவன் வருகிருன். அவனைப் பார்த்தால் திருடனைப் போல் காண்கிறது. அவனைச் சோதிக்கலாம்.

[கோபாலன் வருகிருன்.]

பாண்டி:—பசி கண்ணை மறைக்கிறதே! ஈசனே! நீ எல்லோர்க்கும் உணவு அளிப்பவன் என்பது பொய்யோ! (கோபாலனிடம்) அப்பா, நீ யார்?

கோபாலன்:—நான் ஒரு திருடன்; அரசரது அரண்மனையில் களவாடப் போகிறேன்.

பாண்டி :—என்ன ! அரண்மனையிலா களவாடப் போகிருய்? நீ யாரப்பா?

கோபா :—என் பெயர் கோபாலன். நான் தெற்கு வெளி வீதியில் வசிப்பவன். திருடுவதே என் தொழில்.

பாண்டி :—நல்ல வேளை! எனக்கும் அதே தொழில் தான். நானும் உனக்குத் துணையாக வருகிறேன். எனக்குப் பாதிப் பங்கு கொடுக்கிருயா?

கோபா :—கண்டிப்பாய்த் தருகிறேன். வா போகலாம்.

[இருவரும் பக்கத்திலுள்ள அரண்மனைக்குச் செல்கிருர்கள். காவலாள் தூங்கிக்கொண்டிருக்கிருன்.]

கோபா :—(பாண்டியனை நோக்கி) நீ இங்கேயே காவலாக இரு. நான் உள்ளே போய் திருடிக் கொண்டு வருகிறேன். பிறகு நாம் இருவரும் பங்கிட்டுக் கொள்ளலாம்.

[பாண்டியன் தலை அசைக்கிருன். கோபாலன் உள்ளே போகிருன்.]

பாண்டி :—(தனக்குள்) திருடர்கள் உண்மை பேசுவதை நான் இதுவரை பார்த்ததில்லை. இவன் புது மாதிரித் திருடனுக இருக்கிருன்.

[சிறிது நேரம் கழித்துக் கோபாலன் வருகிருன்.]

கோபா :—அப்பா! அரசனுடைய பொக்கிஷ சாலையில் எவ்வளவோ தங்கம், வெள்ளி யெல்லாம் இருந்தன. அவைகளையெல்லாம் தொடவில்லை. விலை மதிக்கமுடியாத மூன்று இரத்தினங்கள் இருந்தன. அவைகளில் ஒன்றை அரசனுக்காக வைத்துவிட்டேன். மற்ற இரண்டையும் கொண்டு வந்திருக்கிறேன். இந்தா, உனக்கு ஒன்று. (கொடுக்கிருன்) நான் போய் வரட்டுமா?

பாண்டி :—கோபாலா! போய்வா. உன்னை நான் ஒரு நாளும் மறக்க மாட்டேன்.

[கோபாலன் போகிருன். அதன்பின் பாண்டியன் அரண்மனைக்குள் சென்று பொக்கிஷ சாலையை அடைந்து பெட்டியைத் திறக்கிருன்.]

**பாண்டி :**—(பெட்டியிலிருந்த ஒரு இரத்தினத்தை எடுத்துப் பார்த்து) ஆம்! கோபாலன் சொன்னது உண்மையாகவே இருக்கிறது. திருடர்களுக்குள் யோக்கியர்கள் கூட இருக்கிருர்கள். (இரத்தினத்தைப் பெட்டியில் வைத்துவிட்டுப் போகிருன்.)

### *காட்சி 3*

இடம் :—பண்டியன் சபை.

காலம் :—பகல்.

பாத்திரங்கள் :—அரசன், மந்திரிகள், பிரபுக்கள், சேவகர்கள்.

[பாண்டியன் சிம்மாசனத்தில் அமர்ந்திருக்கிருன். மந்திரிகளும் பிரபுக்களும் உரிய இடங்களில் இருக்கிருர்கள். சேவகர்கள் ஒரு புறமாக நிற்கிருர்கள்.]

**பாண்டி :**—பொக்கிஷ மந்திரி! நேற்று இரவு நமது பொக்கிஷத்தில் களவு போனதாகக் கனவு கண்டேன். தாங்கள் உண்மை அறிந்து வாருங்கள்.

[பொக்கிஷ மந்திரி போகிருர்.]

பார்த்தீர்களா! நாம் என்னதான் காவல் வைத்திருந்தாலும் திருடர்கள் அதையும் கடந்து திருடிவிடுகிருர்கள்.

**முதல் மந்திரி :**—அரசே! காவலாளிகள் தூங்கிவிட்டார்கள் போலிருக்கிறது.

**கல்வி மந்திரி :**—மன்ன! கைதேர்ந்த திருடர்கள் எவ்வகைக் காவலையும் கடந்து விடுகிருர்கள்.

**பாண்டி :**—மந்திரிகளே! நான் கண்டது கனவுதானே!

[பொக்கிஷ மந்திரி வருகிருர்; அவரை நோக்கி]

பொக்கிஷம் சரியாக இருக்கிறதா?

பொ. மந்:—அரசே! நமது பொக்கிஷத்தில் விலையுயர்ந்த மூன்று இரத்தினங்களை மட்டும் கள்வர்கள் எடுத்துச் சென்றிருக்கின்றனர். மற்றவைகளெல்லாம் அப்படியே இருக்கின்றன.

பாண்டி :—என்ன! மூன்று இரத்தினங்களையுமா!

பொ. மந் :—ஆம், அரசே!

பாண்டி :—(சிறிது யோசித்து) சேவகா! இங்கே வா. இம் மந்திரியின் உடைகளைச் சோதனை செய்.

[சேவகன் வருகிருன். மந்திரியைச் சோதனை செய்கிருன். மூன்ரும் இரத்தினம் கீழே விழுகிறது.]

முதல் மந்:—ஆகா! இதென்ன ஆச்சரியம்!

ஒரு பிரபு :—(மற்ருெரு பிரபுவிடம்) என்ன ஐயா! பொக்கிஷ மந்திரி பக்காத் திருடன் போல இருக்கிருரே!

பாண்டி :—(கோபத்துடன்) சபையோர்களே! பார்த்தீர்களா, இம்மந்திரியின் செயலை! நேற்றிரவு யான் நகர சோதனைக்குச் சென்றபொழுது ஒரு திருடனைக் கண்டேன். அவன் அரண்மனையில் திருடச் செல்வதாக உண்மையைக் கூறினுன். யானும் அவனுக்கு உடந்தையாக இருந்தேன்; அவன் மூன்று இரத்தினங்களில் ஒன்றைப்பெட்டியிலேயே வைத்துவிட்டு, இரண்டை எடுத்து வந்தான். ஒன்றை எனக்குக் கொடுத்து விட்டு மற்ருென்றைத் தான் எடுத்துச் சென்ருன். பிறகு யான் பொக்கிஷத்திற்குச் சென்று, அவன் கூறியபடியே ஓர் இரத்தினம் இருப்பதைக்கண்டு மகிழ்ச்சிகொண்டேன். பிறகு இங்கு நடந்தவைகளை நீங்கள் யாவரும் அறிவீர்கள். அக்கள்வனிடம் உள்ள உண்மை கூட நம் பொக்கிஷ

மந்திரியிடம் இல்லை—சேவகா! நீ சென்று தெற்கு வெளி வீதியில் வசிக்கும் கோபாலன் என்பவனை அழைத்து வா.

[சேவகன் போகிறான்.]

(பொக்கிஷ மந்திரியை நோக்கி) சேவகர்களே! இக்கள்வனைச் சிறையில் அடையுங்கள்.

[சேவகர்கள் பொக்கிஷ மந்திரியைப் பிடித்துப் போகின்றனர். ஒரு சேவகன் கோபாலனை அழைத்து வருகிறான்.]

**கோபா:**—(பாண்டியனை வணங்கி) அரசே!

**பாண்டி:**—கோபாலா! நேற்று இரவு நீ நம் பொக்கிஷத்தில் திருடியது உண்மைதானா?

**கோபா:**—(பயத்துடன்) உண்மைதான் அரசே!

**பாண்டி:**—கோபாலா! நீ உண்மை பேசுவதைக் கண்டு யான் மகிழ்ச்சி அடைகிறேன். நேற்று இரவு உன்னுடைய கூட்டாளியாக இருந்தவன் யானே. இதோ இருக்கிறது நீ எனக்குப் பங்காகக் கொடுத்த இரத்தினம். இன்று முதல் உன்னையே எனது பொக்கிஷ மந்திரியாக நியமிக்கிறேன். முதல் மந்திரியாரே! என்ன சொல்கிறீர்?

**முதல் மந் :**—ஆம் அரசே! இது சரிதான். பொக்கிஷ மந்திரியாக இருப்பவர் உண்மை உள்ளவராய் இருத்தல் வேண்டும். அப்பதவிக்கு இவர் முற்றிலும் தகுந்தவரே.

**பாண்டி :**—கோபாலா! நீ என்ன சொல்கிறாய்?

**கோபா :**—அரசே! நான் சொல்வதற்கு என்ன இருக்கிறது? தங்கள் உத்தரவுபோல் நடக்கக் காத்திருக்கிறேன்.

பயிற்சி

இந்த நாடகத்தை நடித்துக் காட்டு.

## 25. வெற்றிவேற்கை

### கல்வி மாண்பு

கல்லா ஒருவன் குல்நலம் பேசுதல்
நெல்லினுள் பிறந்த பதரா கும்மே.
நாற்பால் குலத்தில் மேற்பால் ஒருவன்
கற்றில னுயின் கீழிருப் பவனே.
எக்குடிப் பிறப்பினும் யாவரே ஆயினும்
அக்குடியிற் கற்ருேரை வருக என்பர்.
அறிவுடை ஒருவனை அரசனும் விரும்பும்.

ஆகையால்,

கற்கை நன்றே கற்கை நன்றே
பிச்சை புகினும் கற்கை நன்றே.

### எவர்க்கு எது இல்லை

யானைக் கில்லை தானமும் தருமமும்.
பூனைக் கில்லை தவமும் தயையும்.
ஞானிக் கில்லை இன்பமும் துன்பமும்.
சிதலைக் கில்லை செல்வமும் செருக்கும்.
முதலைக் கில்லை நீத்தும் நிலையும்.
நாளும் கிழமையும் நலிந்தோர்க் கில்லை.
கேளும் கிளையும் கேட்டோர்க் கில்லை.
அச்சமும் நாணமும் அறிவிலோர்க் கில்லை.
அல்லல் இல்லை அறிவுடை யோர்க்கே.

### நிலையாமை

உடைமையும் வறுமையும் ஒருவழி நில்லா.

### (1) செல்வ நிலையாமை

குடைநிழ லிருந்து குஞ்சரம் ஊர்ந்தோர்
நடைமெலிந் தோரூர் நண்ணினு நண்ணுவர்.
சிறப்பும் செல்வமும் பெருமையும் உடையோர்
அறக்கூழ்ச் சாலை அடையினும் அடைவர்.
குன்றத் தனையிரு நிதியைப் படைத்தோர்
அன்றைப் பகலே அழியினும் அழிவர்.

எழுநிலை மாடம் கால்சாய்ந் துக்குக்
கழுதை மேய்பாழ் ஆயினும் ஆகும்.

### (2) *வறுமை நிலையாமை*

பெற்றமும் கழுதையும் மேய்ந்த அப்பாழ்
பொற்றொடி மகளிரும் மைந்தரும் செறிந்து
நெற்பொலி நெடுநகர் ஆயினும் ஆகும்.
அறத்திடு பிச்சை கூவி இரப்போர்
அரசோ டிருந்தர சாளினும் ஆளுவர்.

### (3) *யாக்கை நிலையாமை*

மணவணி அணிந்த மகளிர் ஆங்கே
பிணவணி அணிந்துதங் கொழுநரைத் தழீஇ
உடுத்த ஆடை கோடி யாக
முடித்த கூந்தல் விரிப்பினும் விரிப்பர்.

ஆதலால்,

இல்லோர் இரப்பதும் இயல்பே இயல்பே;
இரந்தோர்க் கீவதும் உடையோர் கடனே.

### அச்சம்

தறுகண் யானை தான்பெரி தாயினும்
சிறுகண் மூங்கிற் கோற்கஞ் சும்மே.
குன்றுடை நெடுங்கா டூடே வாழினும்
புன்தலைப் புல்வாய்ப் புலிக்கஞ் சும்மே.
ஆரையாம் பள்ளத் தூடே வாழினும்
தேரை பாம்பிற்கு மிகவஞ் சும்மே.
குஞ்சரந் தன்னைக் கோடழிக்கும் பாம்பு
பைம்பொறி மஞ்ஞைக் கிரையா கும்மே.

### இதனில் இது நன்று

கொடுங்கோல் மன்னர் வாழும் நாட்டில்
கடும்புலி வாழும் காடு நன்றே.
சான்றோ ரில்லாத் தொல்பதி இருத்தலின்
தேன்றேர் குறவர் தேயம் நன்றே.

## பதர்

காலையும் மாலையும் நான்மறை யோதா
அந்தணர் என்போர் அனைவரும் பதரே.
அங்கண்மா ஞாலத் தரசுவீற் றிருந்து
வெங்கலி கடியா வேந்தனும் பதரே.
முதலுள பண்டம் கொண்டுவா ணிபஞ்செய்(து)
அதன்பயன் உண்ணு வணிகரும் பதரே.
வித்தும் ஏரும் உளவா யிருப்ப
எய்த்தங் கிருக்கும் ஏழையும் பதரே.
தன்னு யுதமும் தன்கையிற் பொருளும்.
பிறர்கையிற் கொடுக்கும் பேதையும் பதரே.

## பொய்யும் மெய்யும்

பொய்யுடை யொருவன் சொல்வன் மையினுல்
மெய்போ லும்மே மெய்போ லும்மே.
மெய்யுடை யொருவன் சொலமாட் டாமையால்
பொய்போ லும்மே பொய்போ லும்மே.

## ஒழிக்க வேண்டுவது

பழியா வருவது மொழியா தொழிவது.
சுழியா வருபுனல் இழியா தொழிவது.

## போக்கு வரவு

துணையோ டல்லது நெடுவழி போகேல்.
புணைமீ தல்லது நெடும்புன லேகேல்.
வழியே ஏகுக வழியே மீளுக.

---

# 26. வாக்குண்டாம்

நன்றி ஒருவர்க்குச் செய்தக்கால் அந்நன்றி
என்று தருங்கொல் எனவேண்டா—நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான்தருத லால். 1

நல்லார் ஒருவர்க்குச் செய்த உபகாரங்
கல்மே லெழுத்துப்போல் காணுமே—அல்லாத
ஈரமிலா நெஞ்சத்தார்க் கீந்த உபகாரம்
நீர்மேல் எழுத்துக்கு நேர். 2

அட்டாலும் பால்சுவையிற் குன்றா தளவளாய்
நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர்
கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்க ளேசங்கு
சுட்டாலும் வெண்மை தரும். 3

அடுத்து முயன்றாலும் ஆகுநாள் அன்றி
எடுத்த கருமங்கள் ஆகா—தொடுத்த
உருவத்தால் நீண்ட உயர்மரங்கள் எல்லாம்
பருவத்தால் அன்றிப் பழா. 4

உற்ற விடத்தில் உயிர்வழங்குந் தன்மையோர்
பற்றலரைக் கண்டாற் பணிவரோ—கற்றூண்
பிளந்திறுவ தல்லால் பெரும்பாரம் தாங்கின்
தளர்ந்து வளையுமோ தான். 5

நீரளவே யாகுமாம் நீராம்பல் தான்கற்ற
நூலளவே யாகுமாம் நுண்ணறிவு—மேலைத்
தவத்தளவே யாகுமாம் தான்பெற்ற செல்வம்
குலத்தளவே யாகும் குணம். 6

நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலமிக்க
நல்லார்சொற் கேட்பதுவும் நன்றே—நல்லார்
குணங்கள் உரைப்பதுவும் நன்றே அவரோ(டு)
இணங்கி யிருப்பதுவும் நன்று. 7

தீயாரைக் காண்பதுவும் தீதே திருவற்ற
தீயார்சொல் கேட்பதுவும் தீதே—தீயார்
குணங்கள் உரைப்பதுவும் தீதே அவரோ(டு)
இணங்கி யிருப்பதுவுந் தீது. 8

நெல்லுக் கிறைத்தநீர் வாய்க்கால் வழியோடிப்
புல்லுக்கும் ஆங்கே பொசியுமாம்—தொல்லுலகில்
நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்(டு)
எல்லார்க்கும் பெய்யும் மழை. 9

பண்டு முளைப்பது அரிசியே யானாலும்
விண்டுமி போனால் முளையாதாம்—கொண்டபேர்
ஆற்றல் உடையார்க்கும் ஆகா தளவின்றி
ஏற்ற கருமம் செயல். 10

மடல் பெரிது தாழை மகிழினிது கந்தம்
உடல்சிறியர் என்றிருக்க வேண்டா—கடல்பெரிது
மண்ணீரும் ஆகா ததனருகே சிற்றூறல்
உண்ணீரும் ஆகி விடும். 11

கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்
அவையல்ல நல்ல மரங்கள்—சபைநடுவே
நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய
மாட்டா தவனன் மரம். 12

கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி
தானும் அதுவாகப் பாவித்துத்—தானும்தன்
பொல்லாச் சிறகைவிரித் தாடினாற் போலுமே
கல்லாதான் கற்ற கவி. 13

வேங்கை வரிப்புலிநோய் தீர்த்த விடதாரி
ஆங்கதனுக் காகார மானாற்போல்—பாங்கறியாப்
புல்லறி வாளர்க்குச் செய்த உபகாரம்
கல்லின்மேல் இட்ட கலம். 14

---



